

# ஸப்தகிரி


மார்ச் - 1990

தனிப்பிரதி ரூ. 1 | மலர் 20

வருடச் சந்தா ரூ. 12 | இதழ் 10


## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டை : 'புத்தாண்டு வருகை' சித்திரம் எம். ஸ்ரீநிவாசராவ்

முதல் உள்அட்டை : திருமலைக்கு மொரிஷியஸ்நாட்டுப் பிரதமர் திரு. அனிருத் ஜகன்னாத் அவர்கள் வருகை புரிந்தபோது

2-வது உள்அட்டை : திருமலையில் ரதஸப்தமி. சூர்யப்பிரபை வாகனம்

பின்னட்டை : ஸ்ரீ கோதண்டராமசுவாமி கோயில்- திருப்பதி


சிறப்பாசிரியர் :
திரு. சி.ச. வெங்கடபதிராஜு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்
திரு. கே. சுப்பராவ், எம்.ஏ.

துணையாசிரியர் :
திரு. எஸ். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு.
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI

# உங்களுடன் . . . .

பள்ளி செல்லும காலம் வரை மனிதனின மகிழ்ச்சி அவனது பெற்றோர்களின்மீது ஆதாரப்பட்டுள்ளது அதன பிறகு திருமணம செய்து கொள்ளும காலம் வரை அவனுடைய மகிழ்ச்சி அவன்மீதே ஆதாரப்படுகிறது. பின்னர் குழந்தைகள் பிறந்ததும் அவர்கள் மகிழ்வதைக் கண்டே தான மகிழ்ச்சியைப பெறுகிறான். இது மனிதப் பிறவியின ஒரு சாதாரண வாழ்க்கை அனுபவமாகும். இந்த மகிழ்ச்சிதான அவனுடைய வாழ்க்கையின் உயிர் நாடியாகும. மனயமைதி யில் பிறக்கும் இது மனிதனுக்கே உரிய உணர்வாகும. இமமனயமைதிக்கு மனிதனை இட்டுச செல்வது எனபது அவனது உள்ளத்தின மேனமையினையும், அறிவின் மாட்சிமையினையும் பொருத்தே விளங்குகிறது. மகிழ்ச்சி என்பது ஒருவனின் செல்வ நிலையால் வந்து விடுவதில்லை. அச்செல்வத்தைக் காப்பாற்றுவதில் அல்லது சேர்ப்பதில் அவன எடுத்துக் கொள்ளும் முயற்சிகளில்-ஆர்வததில், மனதில் மகிழ்ச்சி என்பது ஒரு நிரந்தரமான உணர்வாக அவன் பெறுவதில்லை. தான் சேர்த்த செல்வத்தால் தன் சந்ததியினர் பெறும மகிழ்ச்சியைக் கண்டு மகிழக்கூட அவனுக்கு வாய்ப்போ, நேரமோ பல செல்வந்தர்களுக்குக் கிடைப்பதில்லை. ஏனெனில் வாழ்க்கை அவனுக்கு ஓர் இயந்திரமாகி விடுவதால். ஓர் ஏழையின-உழைப்பாளியின் மகிழ்ச்சி நீர்க்குமிழியாக விளங்கினாலும், அச்சிறு மணித்துளிகளில அவன கண்டிடும் மகிழ்ச்சியே அவனுடைய வாழ்க்கைக்கு ஒரு பிடிப்பாக அமைகின்றது. இளைஞர்களின மகிழச்சி எனபது அவர்களது பள்ளி மற்றும் கல்லூரி நாட்களிலே மட்டுமே பெற முடியும் விஷயமாக விளங்குகிறது. பெரும்பாலான நடுத்தர மக்களின் மகிழ்ச்சி என்பது அவர்களது அலுவல நேரங்களில் மட்டுமே பெறபபடும வாய்ப்பாக திகழ்கினறது. பெண்களின் மகிழ்ச்சியானது தங்களுக்கு வாய்த்திடும் கணவன்மார்களின்மீதும் தான் பெற்றிடும குழந்தைகளின்மீதும் ஆதாரப்பட்டுள்ளது. முதி யோர்களின் மகிழ்ச்சி என்பது பிள்ளைகள் தங்களுக்கு அளித்திடும் சமுதாய மதிப்பினையும, வாழ்க்கைத் தரத்தினையும் பொருத்தே விளங்குகிறது.

ஆகவே மனிதப் பிறவியின் எல்லாக் கட்டங்களிலும், எல்லா வயதுப் பிரிவினரும நிரந்தரமான மகிழச்சி என்று ஒன்றினைப் பெறுவது என்பது நடைமுறையில் பெற முடியாத ஒரு கானல் நீராகவே அமைந்துள்ளது. இந் நிலைக்குக் காரணம் காலத்தின் கட்டளை அல்ல. பெருமைக்குரிய மனிதப் பண்புகளின் வீழ்ச்சியே காரணமாகும். ஒரு காலத்தில் ஒரு நாட்டின் பொருளாதார, சமூக, அரசியல் வீழ்ச்சிக்குக் காரணமாக தவறான கோட்பாடுகள், திட்டங்கள் செயல்பட்டனவாக அமைந்திருக்கலாம். ஆனால் இன்று அச்சீரழிவுக்குக் காரணம மனிதர்களின கறைபட்ட உள்ளமும, முறை தவறிய அறிவும் பெரிதும் காரணங்களாக அமைந்துள்ளதை நாம் காணலாம துன்ப உணர்வு மறைய-மங்க வேண்டுமானால் அவ்வுணர்வினை பலரும் பகிர்ந்திட வேண்டும். ஆனால் அப்பகிர்வு வலுக்கட்டாயமாகத்தான் இருக்கும. அதே தருணத்து ஒருவனது மகிழ்ச்சியானது பல விளக்குகளை ஏற்றிடும் ஓர் அகல் விளக்காக அமையும்.

மனிதப் பிறவிக்கே உரித்தான, மனிதனே ஏற்படுத்திக் கொள்ள வேண்டிய மகிழ்ச்சி இன்று ஏன் அது அவனுக்கு கரை காணா கலத்தின் நிலையாக விளங்குகிறது. காலத்தின் கோலமா? விதியின சதியா? இல்லை, மதி மாசுக் குள்ளானதால், உள்ளத்தில் கள்ளம் மிகுந்ததால் மகிழ்ச்சி அவனுக்கு ஒரு எட்டாக் கனியாகிவிட்டது. எதிர் வீட்டின், அடுத்த வீட்டின மகிழ்ச்சியின் மீதுதான இவனுடைய மகிழ்ச்சி பாதுகாக்கபபடுகிறது என்பதை ஒவ்வொருவரும் உணர்ந் திட வேண்டும். அடுத்தவன பசி தான் இவனது கையில் இருக்கும ஒரு கை சோற்றுக் கவளத்திற்கு எதிரி என்பதை நினைவிற கொள்ள வேண்டும். அடுத்தவன் மகிழ்ச்சி தொடர வேண்டுமாயின, அடுத்தவன் பசி தீர வேண்டுமாயின் இவன் மனிதனாக வாழ வேண்டும். தன்னலப் போக்கு அவனிடமிருந்து மறைய வேண்டும், பொதுநலத் தொண்டு, பொது நோக்கு அவன் நெஞ்சிலும், நினைவிலும் நிழலாட வேண்டும. வீதியில கையேந்தும நலிந்தோரைக் கண்டவுடன, அந் நிலையில் தன் சுற்றத்தை ஒரு சில வினாடிகள் நினைத்திட்டால், நலிந்தோர்மீது மதிப்பும், சமுதாயக் கடமை உணர்வும் நமக்குள் வளரும். மொழி மனித நாகரிகத்தின வெளிப்பாடே என்பதை அறிந்து அடுத்தவர் மொழி மூலம் அவரது கலாசாரம் கண்டு நமது கலாசாரத்தை மேலும் பொலிவாகக வழிகாணல் வேண்டும். மனிதர்களை நிறம கொண்டு பார்க்காமல், திறம் கண்டு பாராட்டி மனித வாழ்க்கையை உயர்த்த வகை செய்ய வேண்டும். இடப்பற்று விடுத்து நாட்டுப் பற்று நம்மிடம் ஓங்கிட சிந்தனையினையும செயலினையும புனிதமாக்கிட வேண்டும.

இவையெல்லாம் நம் வாழ்க்கையில் நாம் அடைந்திட நமது மனம பண்பட்டதாகத் திகழ்ந்திட வேண்டும். மனம் பண்பட, நமக்கு வழித்துணையாவது ஆன்மீக ஈடுபாடும், சமய உறவுமேமாகும. இந்து சமயத்தின பெருமையினை, சிறப்பினை-அது காட்டிடும வாழக்கை உண்மைகளைக் கொண்டும், அவ்வுண்மைகளை விளக்கிடும் சமய இலக்கியங்களைப் படித்துணர்ந்தும், சமயத் தலைவர்களின் விளக்கவுரைகளைக் கேட்டும - உணர்ந்தறிந்து அச்சமயம் காட்டிட்ட அறவழியில் நெறி பிறழாது, மனிதனாக நாம் வாழ முற்பட்டால் நமது வாழ்க்கையில் 'மகிழ்ச்சி' யானது என்றும் ஓர் அங்கமாக விளங்கிடும என்பதைப் பூத்திடும் புத்தாண்டான 'பிரமோதூத' நமக்குக் கூறிடும் ஒரு நற்செய்தியாகக் கொண்டு, அவ னடி. சரண் புகுவோமாகுக.

# செய்திச் சுருக்கம்

திருமலையில் :

திருமலைக் கோயில் உண்டியலில் பக்தர் ஒருவரால் 466.5 கிராம் எடையுள்ள சுத்தமான சிறு தங்கப் பாளம் ஒன்று காணிக்கையாகப் போடப்பட்டுள்ளது. இது போன்ற ஒரு காணிக்கை உண்டியலில் செலுத்தப்பட்டுள்ளது இதுதான் முதல் தடவையாகும். இத்தங்கப்பாலத்தின் மதிப்பு சுமார் ரூ. 1.50 இலட்சமாகும்.

ஃ ஃ ஃ

20-2-90 முதற்கொண்டு திருமலைக் கோயில் பிரஸாதமான லட்டுகளுக்கான 'டோக்கன்கள்' வைகுண்டம் க்யூ கட்டிடத் தொகுதிலேயே பக்தர்களுக்கு விற்கப்படுகின்றன. கோயில் முகத்துவாரத்தினருகேஉள்ள கௌண்டர்களில்' டோக்கன்களைச் செலுத்தி 'லட்டு பிரஸாதங்களை' பக்தர்கள் பெறலாம். இவ்'லட்டு டோக்கன்கள்' ஆந்திரா வங்கி மூலமாக விற்கப்படுகின்றன.

பிரம்மோத்ஸவம் :

திருப்பதியில் தி. தி. தேவஸ்தானத்தாரின் மேலாண்மையின் கீழ் செயல்பட்டு வரும் ஒரே சிவன் கோயிலான ஸ்ரீகபிலேஸ்வரசுவாமிகோயிலின் வருடாந்திர பிரம்மோத்ஸவம் 22-2-90 முதல் 26-2-90 வரைவெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது.

ஃ ஃ ஃ

திருப்பதி அடுத்துள்ள ஸ்ரீ நிவாசா மங்காபுரத்திலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வரா சுவாமி கோயிலின வருடாந்திர பிரம்மோத்ஸவம் 15-2-90 முதல் 10 நாட்களுக்கு மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

ஃ ஃ ஃ

திருமலைக் கோயிலின் வருடாந்திர தெப்போத்ஸவம் 7-3-90 முதல் 11-3-90 வரை ஐந்து நாட்களுக்கு நடைபெற உள்ளது.

ஃ ஃ ஃ

திருப்பதியிலுள்ள ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயிலின வருடாந்திர பிரம்மோத்ஸவம 24-3-90 முதல் 1-4-90 வரை கொண்டாடப்பட உளளது. 28-3-90 அன்று நடைபெறும் கருட சேவையும், 31-3-90 அன்று நடைபெறும்தேர்த்திருவிழாவும் இப்பத்து நாள விழாவின் முக்கிய நிகழ்ச்சிகளாக அமையும்.

ஃ ஃ ஃ

திருப்பதிசென்னைமார்க்கத்திலுள்ள நாகலாபுரத்திலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேத நாராயண சுவாமி கோயிலின் தெப்போத்ஸவம் 25-3-90முதல27-3-90 வரை மூன்று நாட்களுக்கு நடைபெற உள்ளது.

அறிவிபபு :

திருப்பதி மற்றும் அதனைச் சுற்றியுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் கோயில்களுக்குச் சென்று வழிபடும் வகையில் தி. தி. தேவஸ்தானம் 'ஆலய தரிசன' பேருந்து ஒனறினை செயல்படுத்தியுள்ளது. இப்பேருந்து திருப்பதியிலுள்ள தி. தி. தே. இரண்டாவது சத்திர வளாகத்திலிருந்து காலை 6 மணி, 10 மணி மாலை 3 மணி ஆகிய நேரங்களில் அதாவது நாள் ஒன்றிற்கு மூன்று முறை புறப்பட்டுச் செல்லும். பெரியோர் ஒருவருககு ரூ. 18/-ம், சிறுர் ஒருவர்க்கு ரூ. 9/-ம் இதற்கான பேருந்துக் கட்டணத் தொகையாக வசூலிககப்படும். திருப்பதியிலுள்ள ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில், ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயில், ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயில், ஹரே ராம ஹரே கிருஷ்ண கோயில், திருச்சானூர் ஸ்ரீ பத்மாவதித் தாயார் கோயில், ஸ்ரீ நிவாச மஙகாபுரம் ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயில், தொண்ட வாடா ஸ்ரீ அகஸ்தீஸ்வர சுவாமி கோயில் ஆகிய கோயில்களுக்கு இப்பேருந்தில் சென்று வரலாம். ஆர்ஜித சேவை கால நேரங்களின்போது யாத்திரிகர்களுக்கு தரிசன வசதி செய்து தரப்படும். இப்பேருந்துக்கான டிக்கெட்டுகளை திருப்பதி இரண்டாவது சத்திரத்தின் 'டோல் கேட்'டில் பெறலாம்.

பாராட்டு விழா :

திருப்பதி சங்கீத ரசிக சமாகமியாவின் ஆதரவில் 12-2-90 அன்று திருப்பதியில் பிரபல சஙகீத வித்துவான் திரு. நேதநூரி கிருஷ்ணமூர்த்தி அவர்கள் புகழ் பெற்ற கர்நாடக சங்கீத மேதை டாக்டர். செம்மங்குடி ஸ்ரீநிவாச ஐயர் அவர்களால் பாராட்டப்பட்டார். திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் சங்கீதப் புலமையினையும், தனித்தன்மையினையும் செம்மங்குடி அவர்கள் புகழ்ந்து பாராட்டினர். சங்கீத ரசிக சாமாக்யாவின் தலைவர் திரு. ஜி. பாலகிருஷ்ண பிரஸாத் அவாகள் இப்பாராட்டு விழாவிற்கு வருகை புரிந்தோரை வரவேற்றார். திருப்பதி ஸ்ரீ தியாகராஜ கட்டிடக் குழுவின் தலைவர் திரு. கே. வி. சுப்ரமண்யம் அவர்கள் தலைமை வகித்தார். திருப்பதி எஸ். ஜி. எஸ. கல்லூரி விரிவுரையாளா, திரு. காமி செட்டி ஸ்ரீநிவாசலு செட்டி அவர்கள் இவ்விழாவில் பங்கேற்றுப் பேசுகையில் திரு. நேதநூரி கிருஷ்ணமூர்த்தி அவர்களின் இசைப்புலமையினையும், அன்னமாச்சார்யா கீர்த்தனைகளின் புகழ் பரப்ப அவர் எடுத்துக கொணட முயற்சிகளையும் பாராட்டிப் பேசினர். இவவிழாவில் தி தி. தே. பொதுஜனத தொடர்பு அலுவலர் திரு ஆர். சூர்ய நாராயண மூர்த்தி, 'ஷண்முகப்பிரியா' ஆசிரியர் திரு. மகாதேவன், டாக்டர். பி. நரசிம்மன் ஆகியோரும் பங்கேற்று உரையாற்றினர். இதுபோது நேதநூரி அவர்களுக்கு 'நாதயோகி' எனும் பட்டம வழங்கப்பட்டது. இவ்விழா சம்பந்தமாக விழா மலர் ஒன்றும் வெளியிடப்பட்டது.

ஃ ஃ ஃ ஃ

# நினைவுகள் நிறைவேற...

திரு. எம். பி. ஜெயமுருகன்,
அரகண்டநல்லூர்

நாம் யார்? எங்கிருந்து வநதோம்? எங்கே செல்கிறோம்?என்றஇத்தகைய தத்துவார்த்தமான கேள்விககு அடிப் படையில் இருந்து ஆழமான பதிலை தருவது வேதாந்தம்தான். வேதாந் தம், அத்வைதம், துவைதம, விசிஷ் டாத்வைதம் எல்லாவற்றின் முக்கிய குறிககோள்—லஷியம் பரிபூரணமான ஆத்மாவோடு இரண்டறக் கலப்பது தான. ஸமுத்திரத்திலிருந்து அலை கள் எழும்புகின்றன. அலைகளிலி ருந்து சிறுசிறு துளிகள் சிதறுகின்றன. அலை, துளி என வெவ்வேறு பெயரில் அழைக்கப்பட்டாலும் அலையும துளி யும் ஸமுததிரமே; அதேபோல மனி தர்கள், மிருகங்கள, பறவைகள் தாவரஙகள் என ரூப மாற்றங்கள் பலவாறு இருந்தாலும் 'ஜீவன்' அடிப் படையில் ஒனறுதான். ஆத்மாவின் பல அங்கங்கள்தான்.

'ஆத்மா' அழிவற்றது,நிலையானது. நீரில் குளிராதது, அக்னியில் வெப் பம் அடையாதது, காற்றில் உலரா தது, வெட்டவோ, சிதைக்கவோ முடியாதது. அபபடிபபட்ட ஆத்மா வின் அங்கமான நாம் (மனிதர்கள்) துக்கம், சோர்வு, தோல்வி இவைகளை சுமந்து கொண்டு 'ஏனோ தானோ' என்று வாழ்ந்து வருகிறோம். நம் முன்னே ஆயிரமாயிரம பிரச்சனைகள-அடுக்கடுக்கான குழப்பங்கள் - நிறை வேறாத கனவுகள்-கற்பனைகள், என்று தணியுமோ துக்கத்தின் வெப்பம்? என்ற ஏக்க பெருமூசசுக்கள்.

இதற்குக் காரணம் நாமா? கட்புல னாகாத இயற்கையின் விதியா?

நிச்சயமாக நாம்தான். நமது குழப்பமான எண்ணங்களும் கட்டுக் கடங்காத மனமும்தான் இதற்குக் காரணம். நிகழ்காலத்தில் நமது மனம் நிற்காமல், நிகழ்கால சுகங் களை அனுபவிக்க தெரியாமலிருக்கி றோம். கண் முனனே இருக்கும் அழ கான பூஞ்சோலையை ரசிக்காமல் வானத்திலிருந்து ஒரு கந்தர்வ தோட் டம் குதிக்க போவதாக கனவு காண் கிறோம். அல்லது பிள்ளை பிராயத் தில ஆற்றங்கரை ஓரமாக மணற் வீடு கட்டி விளையாடிய காலத்தை எண்ணி ஏங்குகிறோம. இப்படி சதா நேரமும் எதிர்கால கற்பனையிலும் கடந்த காலநினைவுகளிலும் காலத்தை சலிப்புடன் ஓட்டிவிட்டு நிகழ் காலத்தை கோட்டைவிட்டு விடு கிறோம். இதே போல் வீண் கனவு களும நினைவுகளும் ரீங்காரமிடு வதற்கு நமது மனதின் குழப்பங்களும் ஒருமுகப்பாடும் இல்லாததுமே காரணம்.

மனம் ஒரு நிலைப்பட்டால் நம்மால் அடைய முடியாதது ஒன்றுமே இல்லை. நிகழ்கால சுகத்தை பூரணமாக அனு பவிக்கலாம். திடமான அறிவும், யோகமும் அடையலாம். ஆத்மா வின் சர்வ சக்தியான பரம்பொருளு டன் நீக்கமற நிறையலாம்.

எங்கும் வியாபித்து நிற்கும் ஆத் மாவின் சர்வ சக்தியின் அங்கமான நாம் நமது நிலையையும் பலத்தையும் அறியாமல் உணராமல் துக்க சாகரத் தில் மூழ்கி மூச்சுத் திணறுகிறோம். மீண்டு வருவதற்கு வழிமுறை கிடைக் காமல் தடுமாறுகிறோம. இநத தேங் கிய வாழ்க்கை தரத்திற்கு நமது அலைபாயும் மனநிலையே காரணம். மனமானது ஒரு முகமாக நில்லாமல் பல தரப்பட்ட சூழல்களால் அலக் கழிக்கப்பட்டுமானுடசமுதாயத்தைக் கீழ் நோக்கி சரிய வைத்து கொண்டு வருகிறது. பெருமை மிகுந்த ஹிந்து வேதங்கள், பலவற்றுல் தாக்கப்பட்ட மனதை குரங்கிற்கு ஒப்பிட்டுப் பேசு கிறது.

பொதுவாக மனம் மேல், நடு, ஆழ் என மூன்று திரைகளால் மூடபபட்டு உள்ளது. ஆலயங்களில் உள்ள பலி பீடம மேலமனமாகவும் பிரதான வாயிலை நடுமனமாகவும் மூல கர்ப்பக கிரகத்தை (மூர்த்தி ஸ்தானம்) ஆழ் மனமாகவும் ஸ்ருதிகள் கூறுகின்றன. அதாவது சாதாரண எண்ணோட்டங் களும் குழப்பமான சூழ்நிலைகளும் கொண்டது மேல் மனம் நாம் மேற் கொள்ளும் பல தொழில்கள் (கர்மா) தோல்வியில் முடிவடைவது இந்த மேல் மன தீர்ப்பின்படி நாம் நடப் பதே காரணம். அடுத்து நடுமனம். இந்தப்பகுதி உறக்கத்தில்தான் வேலை செய்யும். கனவுகள் தோன்றுவதற்கு இதுவே காரணம். இது ஒரு சூன்ய உலகம். அடுத்து ஆழ்மனம். இந்த மனம்தான் முக்கியமானது. அற்புதம் நிறைந்தது. நம்மில் பெரும்பான்மை யோர்களுக்கு இது வேலை செய்வதே கிடையாது. ஆழமான ஒரு முகப் பட்ட சிந்தனை மூலமாக மட்டுமே இது செயல்படக் கூடியது. இந்த மனம் எடுக்கும் முடிவுகள் தோல்வியே அடைவதே இல்லை. இதில் பதியும் எண்ணங்கள், உதிக்கும் கருத்துக்கள மனிதனின் மறைவிற்குப் பின்னும் உலகில் வாழும்.

'ஆத்மா' அழிவற்றது. அழிவற்ற ஆதமாவோடு ஐக்யம் ஆக, சஞ்சலம் குழப்பம் நிறைந்த நமது மனம் ஒருமுகப்பாட் டில் வரவேண்டும். அதாவது மனதில் அடைய வேண்டிய லக்ஷ்யத்தைப் பற்றி ஒரே எண்ணம் ஒரே சிந்தனை இருக்க வேண்டும். இதற்கு நாம் தியானம் செய்ய வேண்டும். பலவிதத் திலும் கடிவாளம் அற்ற குதிரையா கத தறிகெட்டலையும் நமது மனதைக் கட்டுபடுத்தி ஒரே நெறியில் குறிப் பிட்ட ஒரு திசையை நோக்கி பிர

## முதல் 'பார்த்தசாரதி' யார்?

கண்ணனுக்கு 'பார்த்தசாரதி' என்ற பெயர் எப்படி உண்டாயிறறு?

பாரதப் போரில அா்ச்சுனனுக்கு (பார்ததனுககு) 'சாரதி'யாக இருந்து கண்ணன் தோ ஓட்டியதால்தான் அந்தப் பெயா உண்டாயிற்று.

ஆனால் கண்ணனுககு முன்பே ஒரு போரில் அர்ச்சுனனுக்கு சாரதியாக இருந்தவன யார் தெரியுமா?

விராட தேசத்திலிருந்து துரியோதனன கபடமாக ஆநிரைகளைக் கவர்ந்து சென்றதால விராட மன்னன தன பெருமபடையுடன் தென் திசை சென்று போர் புரிந்தான். அதே நேரத்தில வட திசையில் ஒரு பெரும்படையை அனுப்பி துரியோதனன் ஆநிரைகளைக கவர்நது சென்றான். உத்திரன் சிறிய பையன். இதுவரை தான காணாத பெரும் படையைக் கண்டதும் தேரிலிருந்து இறங்கி வீட்டை நோககி விரைந்து ஓடுகிறான. பயத்தினால் அவன் உடல் நடுங்கியது. அர்ச்சுனன் அவன் பின்னாலேயே ஓடிச்சென்று அவனைப பிடித்து இழுத்து வந்து தேரில் ஏற்றினான்.

உடல் நடுக்கததில் இருந்த உத்திரன் இனிப் போர் செயய மாட்டான் என்ற நிலையில்தான் அா்ச்சுனன் தனனை இனனார் என்று வெளிப் படுத்திக்கொணடான. அதைக் கேட்ட பிறகுதான் உத்திரனுக்கு பயம் தெளிந்தது.

மறைத்து வைத்திருந்த ஆயுதங்களை எடுத்து வந்து அர்சசுனன் போர் புரிகிறான். அந்தப் போரில்தான் உததிரன் அர்ச்சுனனுககுத் தேரோட்டியாக இருந்து தேரை விரைந்து செலுததிப்போா செய்ய உதவி செய்கிறான்.

அர்ச்சுனனுக்கு முதலில் தேரோட்டிய பெருமை உததிரனுககு கிடைத்தது. பாாத்தசாரதி பிற்காலததில் செய்யவிருந்ததை உத்திரன் முதலில் செய்து 'முதல்' பார்த்தசாரதியானான்.

—க. இராமலிஙகம்-புதுபபேட்டை.

யோசிப்பதறகு உதவக் கூடிய மிகச் சரியான பெருமை வாய்நத ஒரு சாதனமே 'தியானம' ஆகும. புதர்கள் அடர்ந்த காட்டில் தீப்பிடித்தாற் போல மனதில் மண்டிக் கிடக்கும் கவலைகள், குழப்பங்கள், சஞ்சலங்கள் அனைத்தையும் எரித்து மனதில் ஸ்திரத்தன்மை, அமைதி. பலம், தேஜஸ், சக்தி, அருள், பக்தி. சிரத்தை, ராஜஸம் போன்றவற்றை நிரப்பும் ஒரே ஜீவ ஜோதி தியானம் ஆகும்.

தியானத்தின் சக்தி அளவிடக்கரியது. அதன் பலனை வார்த்தைகளில் சொலலிவிட முடியாது. பூரணமான அனுபவத்தின மூலமே உணர முடியும். நமது ஞானிகளும் முனிவர்களும் தியானத்தின பலனை மிக விரிவாகவும் விளக்கமாகவும் சொல்லிச் சென்றிருக்கிறார்கள். பகவான் கிருஷ்ணன திருவாய் மலர்நதருளிய 'பகவத் கீதையில்' ஆருருக்ஷோர் முனோர் யோகம் காரணமுச்யதே (கீதை அத். 6: சுலோ: 3) என்று கூறுகிறார் அதாவது யோகம் (தியானம்) செய்பவர்களுக்குக் கைகூடி வருமென்று பகவானே சொல்கிறார் என்றால் தியானத்தின் பலாபல சக்தி எவ்வளவு மகத்தானது. ஒரு முகப்பட்ட மனதை அடைவதே தியானத்தின் லக்ஷியம் ஆகும்

ஒரு முகப்பட்ட மனநிலையை அடைவது எளிதான காரியமே! ஆனால் அதற்குப்பொறுமையும் விடாமுயற்சியும், கடுமையான உழைப்புமே தேவை. மனதை நினைத்த நேரத்தில் நினைத்த இடத்தில் யார் ஒருமுகப்படுததுகிறார்களோ அவர்கள் சர்வ சக்தி பெற்றவராகிவிடுவா.

பலம் பொருந்திய கற்கோட்டை கூட தொடர்ச்சியான பீரங்கி குண்டுகளின் தாக்குதலால் வீழ்ந்துவிடுவது உறுதி அதே போல அசைவுகளை ஒடுககிய மனதின ஒரு முகப்பட்ட எணணம், அடைய முடியாத நிலை என்று கருதப்படும் லக்ஷியங்களை மிகச் சுலபமாக நமது காலடியில் கொண்டு வந்துவிடும.

மனிதர்களான நம் ஒவ்வொருவர் உடலும் ஆக்ஸிஜன், கார்பன், ஹைட்ரஜன், நைட்ரஜன், கால்ஷியம், பாஸ்பரம், கந்தகம், சோடியம், பொட்டாசியம், குளோரின், மக்னீசியம், மாங்கனீசம, ஃபுளோரின், புரோமின், அயோடியம், இரும்பு, தாமிரம் போன்ற மூல பொருட்களானது தான். ஆனால் இத்தனைப் பொருட்களை இணைத்து ஒரு மனித உடலை உருவாக்க முடியுமா என்றால் நிச்சயமாக மனிதனால் முடியாது. கட்புலனாகாத இயறகையின் மகோன்னத சிருஷ்டியான நாம், குழப்பமான எணணங்களால் நம்மை நாமே கீழ் நிலைககு தள்ளிக் கொள்ளலாமா? ஆதலால் மனம ஒரு நிலைப் படவும் காரிய சித்தி அடையவும் தியானம் செய்வோம.



# தமிழ் இலக்கியங்களில் ஒப்பாரி

ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்டார் மீளார் என்பதை உணர்ந்தும் மக்கள் ஏன் அழுகின்றனர்?

துக்கத்தின் வடிகால்புலம்பலாகும். மன அமைதிக்காக, ஆறுதலுக்காக அழுதுச் சமாதானமடைகின்றனர் மக்கள். திரு. மு. வை. அரவிந்தன் இத்தகு ஒபபாரிப் பாடலைக் 'கண்ணீரில் பூத்த கவிதை மலர்கள்'என்பார். இந்த இரங்கற்பா கற்பனைச் செறிவோடு இலக்கியச் சிறப்போடு திகழ்வதாம்.

"இளிவே இழவே அசைவே
வறுமையென
விளியில் கொள்கை அழுகை நான்கே'

என்பது தொல்காப்பியம்.

புறப்பொருள் வெண்பாமாலையும் பன்னிரு பாட்டியலும் 'கையறு நிலை' எனும் தலைப்பின் கீழ் இவ்வகைப் பாடல்களை வரையறுக்கின்றன.

நாட்டுப்புற ஒப்பாரிப பாடல்கள் மிகுந்த சோகத்தைத் தன்னுள்ளே அடக்கியவை. ஆயினும அவற்றில் காணப்படும் பொருள்நயம ரசித்து உணரத்தக்கதாக அமைவது சிறப்பு.

புறநானூற்றில் கடையேழு வள்ளல்களுள் ஒருவனுன பாரி இறந்ததும் அவன மகளிர் பாடும்

" அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில்
... ... ... ... ... ... ...
... ... ... ... ... ..
எந்தையும் இலமே"

எனும் பாடம் சோக ரசம் மிக்கது.

" சிறிய கள் பெறினே எமக்கீயுமன்னே
பெரிய கள் பெறினே
யாம் பாடத்தான் மகிழ்த்து
உண்ணும் மன்னே"

என்பது அதியமான் மறைந்த பின் ஔவை பாடும் ஒப்பாரிப் பாடலாம்.

'இத்தகு நாட்டுப்புறப் பாடல்கள் ஏட்டில் எழுதப்படவில்லை. அவற்றைப் பாடிய வாய், இலக்கணத்தைப் படித்ததில்லை. உணர்ச்சி துடித்தது; உயிர்ப்பு விளையாடியது; இதயம் விரிந்தது; தேனருவி பெருக்கெடுத்தது; கன்னித்தமிழ், கழனியெல்லாம் பாய்ந்தது' என்கிறார் மா. வரதராசன் அவர்கள்.

சிலப்பதிகாரத்தில் கோவலன் மாண்டபின் கண்ணகி அழுது புலம்புகிறாள்.

'பெண்டிரும் உண்டு கொல்?
சான்றோரும் உண்டு கொல்?
தெய்வமும் உண்டு கொல்?

என்று கேட்பதுடன் நின்றாளா?

'கீழ்த்திசை வாயிலில் கணவனோடு
புகுந்தேன்
மேற்றிசை வாயிலில் வறியேன்
பெயர்கு

எனச் சோகத்துடன் விம்முவது, நம் மனங்களை நெகிழச் செய்கிறதே! இதனைத் 'துன்பமாலை' எனுந்தலைப்பு துல்லியமாக உணர்த்தும்.

கமபராமாயணத்தில் ஒரு கட்டம். இராவணன் மாண்டதும மண்டோதரி கதறுகின்றாள்.

'கள்ளிருக்கும் மலர்க்கூந்தல்
சானகியை
மனச்சிறையில் கரந்த காதல்
உள்ளிருக்கும எனக் கருதி உடல்
புகுந்து
தடவியதோ ஒருவன் வாளி'

வாலிக்காகத் தாரை அழும் போது

'ஐயா, நீ எனதாவி என்றதும் பொய்யோ?' என்பதும், மகனுக்காகச் சந்திரமதி,

'இனியாரை நம்பி உயிர் வாழ்வோம்
இதுவோ விதித்த விதியே'

என்று அரற்றுவதும் ஒப்பாரி உலகின் உச்சம்.

'கொண்டானின் துன்னிய கேளிர்
பிறர் இல்லை'
—நான்மணிக்கடிகை

'கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது
இல்'—சிலப்பதிகாரம்

இறப்பிலே ஒப்பாரி பாடுதல் தமிழகத்தில் மட்டுமே உள்ள தனிச்சிறப்பு. இதர மதங்களில் இவ்வழக்கமில்லை.

திரு. வி. திருமகள். எம்.ஏ.,
புதுவை.

புராணங்களிலும் இத்தகைய பாடல்களுக்கு இடமுண்டு. கந்த புராணத்தில் 'காமதகனப்படலம்' பகுதியுள் வருவது ரதிபுலம்பல்.

'சொன்னாலும் கேட்டலையே
யான் தனியே இருப்பதேயோ'

ஒப்பாரிப் பாடல்களில் பஞ்சகல்யாணி ஒப்பாரி, சிங்கப்பூர் ஒப்பாரி, நவரத்ன ஒப்பாரி, நவரச ஒப்பாரி, காந்தாமணி ஒப்பாரி, பாவையர் ஒப்பாரி, தெய்வலோக, எமலோக ஒபபாரிகள், கோமள மற்றும் தங்க ரத்ன ஒப்பாரி எனப் பலவகைப் பிரிவுகள் உண்டாம்.

ஒப்ப + ஆரி - ஒப்பாரி= அழுகைப் பாட்டு

என இதற்குப் பொருள் கூறுவர். சித்தர்கள் வரிசையில் பத்தரகிரியார் பட்டினத்தார் பாடல்கள் 'புலம்பல் இலக்கியம்' எனப் பேசப்படுகின்றன.

தன் தாய் இறந்ததும் பட்டினத்தார் பாடுவதும், சீதக்காதி வள்ளல் இறந்ததும் உமறுப் புலவர் உருகுவதும், இராவணனுக்காக விபீடணனும், வாலிக்காக அங்கதனும் புலம்புவது ஆண்கள் ஒப்பாரி.

'இல்லென்று பூத்த சிறுநெருஞ்சிக் காட்டுடே
நில்லென்று சொல்லி நிறுத்தி வழிபோனீரே'

என்ற நாட்டுப்புற ஒப்பாரி இனிமை நிறைந்தது.

'' பச்சை மயில் மேலே என்னைத்தேடிய ராஜாவே
பரமர் வாரார் என்றிருந்தேனெ
இன்னைக்கு அந்த
பச்சைமயில் பறந்ததென்னு
என்னைத்தேடிய ராஜாவே
பரமர் முடி சாய்ந்ததென்னு'

என்பது கணவனுக்கும்,

' கல்லாலே கப்பல் செய்து அடா
நான் பெற்ற மகனே
கடலிலே விட்டேனடா
இன்னைக்கு அந்த
கடலில் விட்ட கப்பலது அடா
நான் பெற்ற மகனே
கரையில் வந்து சேரலையே '

என்பது மகனுக்கும்,

ஆனைமுகம் காப்பு என்னைப்பெற்றுளே அம்மாடி
ஐகோர்ட்டு லாயராச்சே இன்னைக்கு
அதட்டி அழைக்கலையே என்னைப் பெற்றுளே அம்மாடி
அங்கம் துடிக்கிறதே

என்பது தாயாருக்கும், இன்னும் தகப்பனுர், அத்தை, சகோதரன், மாமியார் என்று பல உறவினர்களுக்கும் தனித்தனியே ஒப்பாரிப் பாடல்கள் நாட்டுப்புறங்களில் உலவுவதையும் பார்க்கிறோம்.

திரைப்படங்களிலும் இத்தகைய அழுகைப் பாடல்களுக்குக் குறிப்பாகச் சோகச்சுவை ததும்பும் தத்துவப் பாடல்களுக்கு நல்ல வரவேற்பு இருப்பது நாம் அறிந்ததொன்று.

நந்திக்கலம்பகம் எனும் நூலில் தலைவன் நந்திவர்மன் மாண்டதாகவும், புலவர் குழாம் புரப்பார் இல்லாது கலங்குவதாகவும், அவன் உயிரோடு உள்ளபோதே ஒருபுலவன் புனைந்துரைக்கிறன்.

செந்தழல் அடைந்ததுன் தேகம்
யானும் என் கலியும்
எவ்விடம் புகுவோம்

என்பது இவ்வகைத்து.

பாரதத்தின் முன்னுள் பிரதமரும் 'மாமா' என அன்போடு அழைக்கப் படுபவருமான ஜவஹர்லால் நேரு மாண்ட போது,

'சாவே உனக்கொருநாள் சாவு வந்து சேராதோ
தீயே உனக்கொருநாள் தீமூட்டிப் பாரோமோ'

என வெடித்துக் குமுறுகிறர் ஓர்கவி.

மகள் முகம் காணுது தாய் புலம்புகையில்

'பின்னிமுடிச்சிடம்மா பிச்சிப்பூச் சூடிடம்மா'

எனும் கொஞ்சுமொழிகளை இனி எப்போது கேட்கப்போகிறேன் என்று அரற்றுவதைக் கவிமணி கண்முன்னே கொணர்கிறர்.

அரசவைக் கவிஞராக விளங்கிய கண்ணதாசன், தான் உயிருடன் இருக்கும் போதே தன்னைப் பற்றிய அழுகைப் பாடலை வடித்தார். 'இருந்து பாடிய இரங்கற்பா' என்பதே அது.

' வானத்து அமரன் வந்தான் காண்
வந்தது போல் போனுன காண்
... ... ... ... ... ... ...
அத்தனையும் வேண்டாம்
அடியேனை விட்டு விடும் '

என்று நகைச்சுவையுடன் குறிப்பிடுகிறர் மற்றோர் கவிஞர்.

சங்க காலத்தில் இத்தகுப் புலம்பல் இலக்கியம் இருப்பினும், அவர்கள் போர்க்களத்தில் வீரமரணம் எய்தியோரை எண்ணி அழுததில்லை. மாறுக அதனைப் பெருமையுடன் சாற்றுவதாகக் காண்கிறோம்.

பின்னர் வந்த நொண்டி நாடகங்களும் புலம்பலைத் தம்முள் கொண்டன. ' கட்டபொம்மன் கூத்தில் ' வரும் ஒப்பாரிப் பாடல் உவமைநயம் மிக்கதாம். ஆங்கிலத்தில் ' Elegy ' என அழைக்கப்படும் இக்கண்ணீரில் பூத்த கவிதைமலர்கள் காலந்தோறும் மாறினும், இலக்கியத்தில் தமக்கென ஓரிடம் பெற்றவை என்றால் தவறுண்டோ?



'ஸப்தகிரி

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரா கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப் படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D) அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறர்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

# பகவந்நாம மஹிமை

திரு. R. சத்தியமூர்த்தி D.M.E.
திருப்பாப்புலியூர்.

பகவநநாம ஸாம்ராஜ்ய
லக்ஷ்மீ ஸர்வஸ்வ விக்ரஹம |
ஸ்ரீமத் போதேந்தர யோகீந்த்ர
தேசிகேந்த்ர முபாஸ்மஹே ||

ஸத்குரு பகவந்நாம போதேந்த்ர ஸ்வாமிகள் திருவடிகளில் சரணம் புகுந்து அவருடைய கருணை பலத்தைக் கொண்டு இந்த வ்யாக்யானம் எழுதுகிறேன். சாஸ்த்ரங்கள் ச்ருதி, ஸ்மிருதி, இதிஹாசம், புராணம் என்று நான்கு வகைப்படும். ச்ருதியின் சாரம் ஸ்மிருதியாசவும,ஸ்மிருதியின் சாரம் இதிஹாசமாகவும், இதிஹாசத்தின் சாரம் புராணமாகவும் வந்ததால் புராணமே உலகுக்கு அதிக உபயோகமாகவும் ஸாரதர்சியாகவும் இருக்கிறது. அந்தப் புராணங்கள் பதினெட்டில், கடைசியில் தோன்றியது ஸ்ரீமத் பாகவதம். எனவே, இதுவே எல்லா சாஸ்த்ரங்களுக்கும் ஸாரமானது.

பிரம்ம ஸூத்ரங்களுடைய அர்த்தமாகவும், பாரதத்தின் வ்யாக்யானமாகவும், காயத்ரீ மந்த்ரத்தின பாஷ்யமாகவும், வேதங்களின அர்த்தத்துடன் கூடியதாகவும், ஸகல புராணங்களின் ஸாரமாகவும, ஸாக்ஷாத் பகவானலேயே சொல்லப்பட்டதாகவும், பன்னிரெண்டு ஸ்கந்தங்களாகவும், பதினெண்ணாயிரம் ச்லோகங்கள் உள்ளதாகவும உள்ளது இநத ஸ்ரீமத பாகவதம் என்று கருட புராணத்தில் சொல்லப்பட்டிருப்பதால் இது ஸகல சாஸ்த்ரங்களும் அடங்கிய உயர்ந்த பிரமாண க்ரந்தமாகும். பன்னிரெண்டாவது ஸ்கந்தத்தில் பகவான் பின்வருமாறு கலியை வர்ணித்துவிட்டு பிறகு அதைத்தாண்ட வழி கூறுகிறார்:

கலேர் தோஷ நிதே ராஜந்
அஸ்திஹ்யேகோ மஹான் குண :
கீர்தனதேவ க்ருஷ்ணஸய
முக்த ஸங்க; பரம வ்ரஜேத ||

"ஓ பரீக்ஷித்து ராஜனே! கலியானது தோஷங்களுக்கு இருப்பிடமானதால் உயர்நத குணம் ஒன்றே ஒன்றுதான் உள்ளது. ஸ்ரீ க்ருஷ்ணனுடைய கீர்த்தனத்தினலேயே பந்தம் ஒழிந்தவனாக மோக்ஷத்தையடைவான்."

'கலேர் தோஷநிதே:'

கலியில் தோஷங்கள் இருக்கின்றன என்று சொன்னார். அவையாவன: கலியில் வர்ணாச்ரம தர்மங்கள் நிலைத்திராது. பிராமணர்கள ஆசாரஹீனர்களாகவும், சிகை, உபவீதம், கச்சம், காயத்ரீ, வேதம் இவைகளை விட்டவர்களாகவும், அப்படி இவைகளை வைத்திருந்தால் டம்பம் உள்ளவர்களாகவும், காமக் க்ரோதங்களுக்கு அடிமையானவர்களாகவும், தன்வலமுடையவர்களாகவும், ஹீனத்தொழில் உள்ளவர்களாகவும், இதர வருணத்தவர்கள் பிராமணர்களை நிந்திப்பவர்களாகவும், பிரம்மசாரிகள் வேதங்களை அத்யயனம் செய்யாது லோகாயதமான படிப்புகளைக் கொள்வார்களென்றும, தர்மம் மறந்தவர்களாகவும், ஸன்யாசிகள் காஷாயம், தண்டம் மாத்திரம் தரித்துக் கொண்டு காமக் க்ரோதங்களை அடக்காதவர்களாகவும, ஸ்தரீகள் புருஷர்களை அடக்குபவர்களாகவும், நன்னடத்தை மீறியவாகளாகவும வாழ்ந்து முடிவில் கோரமான நரகத்தில் தள்ளப்படுவார்கள். அதிகமழை, மழை இல்லாமை, வெள்ளம், பூகம்பம், க்ரஹசாரம் முதலிய பல கஷ்டங்களுக்கு இரையாகி மக்கள் மடிவார்களென்றும் சொல்லி இருப்பதால், கலி மிகவும் தோஷமுள்ளது எனப்படுகிறது.

'ஏகோ மஹான் குண.'

இத்தகைய கலியில் ஒரு உயர்ந்த குணமுள்ளது என்றார். 'ஏகோஹி' என்பதால ஒரே ஒரு குணம் என்று அர்த்தமாயிற்று. இந்த ஒரு குணமே மற்ற எல்லா தோஷங்களையும் போக்கிவிடும்.

'கீர்த்தனதேவ க்ருஷ்ணஸ்ய'

அந்தகுணம் எதுவென்றால், பகவந்நாம ஸங்கீர்த்தனம்தான். இந்த பகவந்நாம கீர்த்தனத்திற்கு காலமோ, தேசமோ, பொருளோ, நியமமோ தேவையில்லை. இது யாகம், யோகம், க்ஷேத்திரம், தீர்த்தம் முதலியவைகளைப் போல பலஹீனமாக இல்லை. பிராமணர் முதல் சண்டாளர் வரை எல்லோருக்கும்இதில் அதிகாரமுண்டு. எனவே கலியில் நாம சங்கீர்த்தனத்தை விட்டால் வேறு கதியில்லை.

'முக்த ஸங்க: பரம் வ்ரஜேத்:'

ஆகையால், இந்த நாம கீர்த்தனத்தால் ஜீவன் ப்ரக்ருதி ஸங்கம ஒழிந்து முக்கதனாகி பரத்தை அடைகின்றான் என்றார்.

எனவே கலியில் யாகம், யோகம், தவம், தீர்த்த யாத்திரை முதலிய விசேஷ தர்மங்கள் தேவையில்லை.

" ஹரே ராம ஹரே ராம
ராம ராம ஹரே ஹரே
ஹரே க்ருஷ்ண ஹரே கிருஷ்ண
கருஷ்ண க்ருஷ்ண ஹரே ஹரே"

எனனும் இந்த கீர்த்தனமே ஸர்வோத்தமமானது. எனவே இந்த கீர்த்தனத்தை ஸகல ஜனங்களும் தனியாக ஜபம் செய்தும், கோஷ்டியில் கீர்த்தனம் பண்ணியும், ஜபம் எழுதியும் வந்தால் உலக க்ஷேமமுண்டு என்றும், மோக்ஷமும் பெறலா

மென்றும் ஸகல சாஸத்ரங்களும் ஸத்யமாக அறுதியிடுகின்றன.

பல புராணங்களில் பல இடங்களில் பகவந்நாம மஹிமையைப்பற்றிய ச்லோகங்களைக் காண்போம்:

நாரத புராணம் கூறுகிறது:

“ஹரேர் நாமைவ நாமைவ நாமைவ
மம ஜீவனம் |
கலௌ நாஸ்த்யேவ நாஸ்த்யேவ
நாஸ்த்யேவ கதிரன்யதா ||

“கலியில் ஹரி நாமத்தைவிட்டால் வேறு கதியில்லை”.

புராணத்திலிருந்து:

“கலௌ கல்மஷ சித்தானும்
பாப த்ரவ்யோப ஜீவினும் |
விதிக்ரியா விஹீனும கதிர் கோவிந்த
கீர்த்தனம் ||”

“கலியில் கல்மஷ சித்தம் உடையவர்களும், பாபகரமான வருத்தி உடையவர்களும், செய்ய வேண்டிய க்ரியைகளை விட்டவர்களுமான ஜனங்களுக்கு கோவிந்த கீர்த்தனமே கதி”

யஜுர்வேதம் கூறுகிறது :

“ப்ரதத்தே அத்ய ஸிபிவிஷ்ட நாமார்ய :
ஸம்ஸாமி வயுனனி வித்வான்”

“ஒ விஷ்ணுவே! உனது நாமமே சிறந்ததென்று க்ஷேமத்தை அடையும் மார்க்கங்களையறிநதவனும், அதில் ஸமர்த்தனுமாகிய நான் புகழ்கிறேன்”.

ஸ்ரீதர வெங்கடேசர் கூறுகிறார்:

“அயந்தே விஸ்ராந்திம் நிகமநிகரா
யத்ர பரமாம்
யதானந்தோதன்வத் ப்ருஷதலவது
ஷ்டா விதிமுகா: |
மஹேஸோ ஜிஹ்வாயா: க்ஷணமபி ஸ
நைவோஜ்ஜிதுமலம்
நதுத்வாம் ராமாக்யே தவ மதுரதாம்
வர்ணயது க:” ||

“ஸகல வேதங்களும் எங்கு வந்து விஸ்ராந்தி எடுத்துக் கொள்கின்றனவோ, ப்ரம்மாதி தேவதைகளும் எந்த ஆனந்தத்தின் ஓர் திவலையில் ஜீவிக்கின்றனரோ, பரமசிவனும் எதை ஒரு க்ஷணமும் தன் நாக்கை விட்டுப் பிரிப்பதில்லையோ அத்தகைய ராம நாமத்தின் இனிமையை வர்ணிக்க எவனுக்குத்தான் முடியும்?”

விஷ்ணு ஸூக்தம் கூறுகிறது :

“தருவாஸோ அஸ்ய கீரயோ ஜனாஸ:”

“இந்த விஷ்ணுவை கீர்த்தனம் செய்யும் ஜனங்கள் ஜனன மரணங்களென்னும் போக்குவரத்தற்ற நிலையான பதவியை அடைவார்கள்.”

ருக்வேதம் கூறுகிறது:

“ஆஸய ஜானந்தோ நாம சித்விவக்தன|
மஹத்தே விஷ்ணோ ஸுமதிம
பஜாமஹே ||”

“ஞானம் வேண்டுமென்ற விருப்பமுடையவர்களே! நீங்கள் ‘ஓ விஷ்ணவே! உன் விஷயமான தத்வ ஞானத்தை அடைவோமாக’ என்று அவனது நாமங்களில் ஏதாகிலுமொன்றை ஒரு தரம் உச்சரியுங்கள்”

தர்ம சாஸ்திரப்படி ஒருவன் நடப்பதென்பது கலியில் மிகவும் ச்ரம ஸாத்யமான காரியம். ஆனால் தர்ம சாஸ்திரங்கள் விதித்த பகவந் நாம கீர்த்தனம் யாவராலும் ஸுலபமாகச் செய்ய முடியுமே! பகவந் நாம கீர்த்தனத்தை செய்து விட்டால் தர்ம சாஸ்த்ரத்திலுள்ள ஸகல தர்மங்களையும் யதாவிதி அனுஷ்டித்ததாகிவிடுமென்று தர்ம சாஸ்திரமே ஒப்புக்கொள்கிறது.

வஸிஷ்ட ஸ்ம்ருதி கூறுகிறது :

“க்ருஷ்ண க்ருஷ்ணேதி ராமேதி
ஸஞ்ஜபன் ஹரிதத்பர: |
ராஜஸூய ஸஹஸ்ராணும் பலமாப்
னோதி மானவ: ||”

“க்ருஷ்ணா! க்ருஷ்ணா! ராமா! என்று ஹரிநாம கீர்த்தனம ஒருவன் செய்வானானால் ஆயிரம் ராஜஸூயங்கள் செய்த பலனை அடைவான்”.

விஸ்வாமித்ர ஸ்ம்ருதி கூறுகிறது:

“விஸ்ருதாநி பஹூன்யேவ தீர்த்தானி
விவிதானி ச |
கோட்யம ஸேனபி துல்யானி ஹரேர்
நாம ஜபேன வை ||”

“கணக்கு வழக்கற்ற புண்ய தீர்த்தங்களைக் கேள்விப்படுகிறோம். அவைகள் ஹரிநாம ஜபத்தின் மஹிமையில் கோடியில் ஒரு பங்கு கூட ஆகாது”

ஜாபாலி ஸ்ம்ருதி கூறுகிறது:

“ஹரோ நாமபரம் ஜாப்யம் த்யேயம்
கேயம் நிரந்தரம் |
கீர்த்தனீயஞ்ச ஸததம் நிர்வ்ருதிம்
பஹுதை ச தா ||”

“மோக்ஷத்தை விரும்புகிறவன் அனவரதமும் ஹரி நாமத்தையே த்யானம் செய்யவேண்டும். ஹரி நாமத்தையே கீர்த்தனம் செய்ய வேண்டும்.”

காலவ ஸ்ம்ருதி கூறுகிறது:

“ஸர்வபாப யுதோ யஸ்து நருஹரேர்
நாம கீர்த்தனுத் |
விமுச்ய ஸர்வதுர்காணி யாதி ப்ரும்ம
ஸனதனம் ||”

“ஸகல பாபங்களையும் செய்தவனாயினும நரஸிம்ம நாமத்தை கீர்த்தனம் செய்பவன் ஸகல கஷ்டங்களையும் தாண்டி ஸனாதனமான ப்ரும்மத்தை அடைகிறான்”.

“ப்ரமாதாத் குர்வதாம் கர்ம
பரச்யவத்யத் வரேஷு யத் |
ஸ்மரணதேவ தத்விஷ்ணோ:
ஸம்பூரணம் ஸ்யாதிதி ஸ்ருதி: ||”

“அலக்ஷியத்தினால் கர்மானுஷ்டானம் செய்பவர்களுககு யகஞங்களில தவறுதல் ஏற்பட்டதான ஏறபடும். அப்படி ஏற்பட்டால் விஷ்ணு ஸ்மரணத்தால் சரிவர அனுஷ்டித்ததாகிறது”.

“நிஹதஸ்ய ஹி யக்ஞஸ்ய ஸத்ய:
கர்த்தா விநஸ்யதி |”

என்பதால், விஹிதமான தர்மம் விபரீதமாய் அனுஷ்டிக்கப்பட்டால்

கர்த்தாவுக்கே நாசத்தைச் செய்து விடும். நிஷ்பலமாய்ப் போவதோடு மட்டுமில்லை ஒரு குறையுமின்றி தர்மத்தை அனுஷ்டித்த பலன் நாம கீர்த்தனத்தாலேயே வருமாகையால், ஸகல வைதிகர்களும் நாம கீர்த்தனம செய்யாவிடில் நாசமடைவார்கள். எனவே, நாம கீர்த்தனம விஹித கர்மத்தைவிட அவசியமான தர்மமாகி விடுகிறது.

பகவந்நாம போதேந்த்ர ஸ்வாமிகள கூறுகிறார்:

" யத்கிஞ்சின் நித்யகர்ம ஸங்குச்ய ப்ரமசாரிணா
க்ருஹஸ்தேன, வானப்ரஸ்தேன, யதினாச நித்யம்
நாம கீர்த்தன மவஸ்யம் கர்த்தவ்ய மேவ"

"தாரணை, த்யானம் இவைகளைக் குறைத்துக் கொண்டு மாதயான் ஹிகம் செய்வது போலும், ஸகல நித்ய கர்மங்களையும் குறைத்துக் கொண்டு ஜோதிஷ்டாமம் செய்வது போலும், ப்ரும்மசாரியாலும் க்ருஹஸ்தனாலும், வான ப்ரஸ்தனாலும், யதியினாலும் நாம கீர்த்தனம் அவசியம் செய்யப்பட வேணடும.

உத்தியோக பாவதத்தில் பகவான் கூறுகிறார்:

" ருணமேதத் ப்ரவருத்தம் மே
ஹ்ருதயாந் நாபஸர்பதி |
யத்கோவிந்தேதி சுக்ரோஸ
க்ருஷ்ணா மாம் தூரவாஸினம் ||"

"ஸபையில் கௌரவர்களிடம அகப்பட்டுக் கொணட த்ரௌபதை த்வாரகாவாஸியான என்னை 'கோவிந்தா' என்று அழைத்தது எனக்கு மறக்கவில்லை. அந்த நாமோ சாரணத்தினால அவளிடம நான் கடமைப்பட்டுளளேன்."

ஸாம வேதம கூறுகிறது:

" ஸதா தே நாம ஸ்வயஸோ விவச்மி"

"அனவரதமும் உனது நாம ஜபத்தை சொல்லுகிறேன்."

சாந்த்யோக்யம் கூறுகிறது.

" நாம ப்ரம்மேத்யுபாஸீத"

"எவனொருவன பகவந் நாமத்தையே ப்ரும்மமாக உபாஸிக்கின்றானோ அவன் ப்ரும்மமாகவே ஆகி விடுகிறான்".

ஸ்ரீமத் பாகவதத்தில் விஷ்ணு தூதர்கள் கூறுகிறார்கள்:

" நாம வ்யாஹரணம் விஷ்ணோ யதஸ்தத்
விஷயாமதி"

"பகவந் நாம கீர்த்தனத்தாலேயே பகவத் விஷயமான ஞானம் பிறக்கும் "

தைத்ரீயோபநிஷத் கூறுகிறது:

" யஸ்ய நாம மஹத் யஸ."

"எவருடைய நாமத்தின் பெருமையே அளவிட முடியாதோ, அவருக்கு ஈடு இணை உலகில் உண்டோ!"

தைவக்ஞ விலாஸம் என்னும் ஜோதிஷ சாஸ்த்ரம் கூறுகிறது:

" ஸ்த்ரீ ஸூத்ர த்விஜ பநதூனாம்
அனர்ஹாணாஞ்ச கர்மஸு |
மோக்ஷா பேக்ஷாவதாம் தேஷாம்
கர்த்தவ்யம் நாம கீர்த்தனம் ||"

"ஸ்த்ரீகள, இதரர்கள் ப்ரும்ம பந்துக்கள் யாவரும் பகவந் நாமத்தினாலேயே கரையேற வேண்டும்."

க்ரூர க்ரஹங்களினால் ஏற்படும் துன்பங்கள் யாவும் பகவந் நாம கீர்த்தனத்தால் தீருகின்றன என்றும் மேற்படி ஜோதிஷ சாஸ்த்ரம் கூறுகிறது.

சரகஸம்ஹிதை என்னும் ஆயுர்வேத சாஸ்த்ரம கூறுகிறது:

" விஷ்ணும் ஸஹஸ்ர மூர்த்தானம் |
சராசர பதிம் விபும ||
ஸ்துவந் நாம ஸஹஸ்ரேண |
ஜ்வரான் ஸர்வான வ்யபோஹதி ||"

"விஸ்வரூபியான விஷ்ணுவை ஸஹஸ்ர நாமங்களால் துதித்து ஸகல ஜ்வரங்களிலிருநதும் விடுபடலாம்."

காத்யாயன ஸம்ருதி கூறுகிறது:

" அர்த்தவாதம் ஹரேர் நாம்னி
ஸம்பாவயதி யோ நர: |
ஸ பாபிஷ்டோ மனுஷ்யாணாம்
நரகே பததி த்ருவம் ||"

"ஸகல சாஸ்த்ரங்களும் நாம மஹிமையை இவ்வாறு புகழ்ந்து பேச, யார் இதை நம்பவில்லையோ அவர்கள் நரகத்தை அடைவார்கள்."

வேதவ்யாசர் தன்னுடைய சாஸ்த்ர விசாரங்களை பின்வருமாறு முடிக்கிறார்:

" ஆலோட்ய ஸர்வ ஸாஸ்த்ராணி
விசார்ய ச புன: புன: |
இதமேகம் ஸுநிஷ்பன்னம்
த்யேயோ நாராயண: ஸதா ||"

"ஸகல சாஸ்த்ரங்களையும் கிளறிப் பார்த்தும் மறுபடியும் மறுபடியும் விசாரித்தும் முடிவில் தீர்மானிக்கப் பட்டது 'நாராயண த்யானமே அனவரதமும் செய்ய வேண்டும்' என்பதுதான்".

இவ்வாறு ஸகல சாஸ்த்ரங்களும் ஒருமுகமாக பகவந் நாமத்தின் பெருமையை அறிவிக்கின்றன. எனவே, எல்லா சாஸ்த்ரங்களுடைய சாரம் பகவந நாமமதான.

எனவே, நாம் அனவரதமும் பகவந் நாம பாராயணம் செய்து, பகவானின் மேலான கருணாகடாட்சத்தைப் பெறுவோமாக. ஒருக்காலும் பகவந நாமத்தை ஆச்ரயித்தவன் வீணாக பாட்டான். நாமத்தை சொல்பவனுக்கு நரகமில்லை. இது ஸத்தியம்.



# வேத நல் விளக்கு

**न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः । तमेव भान्तमनु भाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति ॥**

"அங்கு சூரியனும் பிரகாசிப்பதில்லை. விண் மீன்களும் சந்திரனும் கூட சுடர் விடுவதில்லை. மின்னலும், இடியும், ஏன்? இதோ இந்த அக்னியும்கூட அப்பிரகாசத்தின் முன் பிரகாசிப்பதில்லை. அவனாலேயே, அவனைப் போன்று யாவும் ஒளிர்கின்றன. இவன் பிரகாசத்தினாலேயே உலகில் யாவும் ஒளி பெறுகின்றன."

**வேத ஞானம் :**

ஸனாதன தர்மம் என்று அழைக்கப்படும் நமது வேத மார்க்கம் ஓர் ஆறு போன்றது. ஜீவநதி. அதன் கரைகளிலும், ஆழமற்ற கரையோரங்களிலும் குழந்தைகள் விளையாடலாம். இதன் ஆழமான பகுதிகள், நீரில் மூழ்குவதையே தொழிலாகக் கொண்டவர்களால்கூட அடையக் கடினமானவை. அதாவது ஞானமற்ற பாமர மக்களுக்கும் வேத மார்க்கம் இன்பமளிக்கிறது; அஸம்பிரஞ்ஞாத ஸமாதி போன்ற மிக உயர்ந்த நிலைகளிலேயே மூழ்கிக்கிடப்போரால்கூட அறியப்பட இயலாத பெரு ஞானமாயிருக்கிறது.

வேத ஞானம் பூரண ஞானம். இதற்கு அணிசேர்க்க புதியதாக வேறு எந்த நாட்டிலிருந்தும் ஏதும் இங்கு வரத் தேவையில்லை. இதற்கு அணி செய்யத் தக்க அழகு சாதனங்களோ அல்லது அறிவு சாதனங்களோ மற்ற சமயங்களில் என்ன இருக்கின்றன? இது கற்றனைத்து ஊறும் மணற் கேணி. எல்லாப் பிராயத்தினருக்கும், அவரவர் அறிவு நிலைக்கும் அனுபவ நிலைக்கும் ஏற்றவாறு அள்ளிக் கொள்ளத் தக்க அருள் ஞானக் குவியல்.

தன்னை நாடி வந்தவனின், நம்பி வந்தவனின் இடர் நீக்கும். சுடர்க் கொடியானைக் காட்டுவிக்கும் நந்தாச் சுடர். இந்த ஞான நல்விளக்கை பக்தியுடனும் பஹுமானத்துடனும் அணுகிப் போற்றினால் இன்னா விலக்கலாம், இனியன பெறலாம்; தன்னை யறியலாம், தன்னில் வாழலாம்.

**அணுகு முறை :**

சில வருடங்களுக்கு முன் ஒரு கிராமத்திற்குச் செல்ல நேர்ந்தது. வெகு நாட்களாகப் பூட்டியேயிருந்த ஒரு வீட்டைத் திறந்து சுத்தம் செய்ய எண்ணினோம். சிறிய பையன்கள் பலர் ஆர்வமுடன் சுற்றிச் சுற்றி வந்தனர். வாயிற் கதவைத் திறந்து உள்ளே நுழைந்தபோது ஒரு சிலந்தி மிகப் பெரியதொரு வலை பின்னியிருந்ததைக் கண்டோம்.

ஒரு பையன் அவ்வலையைச் சுற்றிச் சுற்றிப் பார்த்து விட்டு, எவ்வளவு அழகாக சிலந்தி இவ்வலையைப் பின்னியிருக்கிறது என வியந்தான. இரண்டாவது பையன் இப்போது எங்கே அந்த சிலந்தியைக் காணோம் என்று வினவினான். மற்றொருவன் சிலந்தி இவ்வலையை எவ்வளவு வேலைத் திறமையுடனும் அறிவு நுணுக்கத்துடனும் பின்னியிருக்கிறது என்றான். மாட்டிக் கொண்ட பிராணி மீள முடியாதபடி மிகத் திறமையுடன பின்னியிருக்கிறதே சிலந்தி என்று மற்றொருவன் வியந்தான்.

பொருள் ஒன்றுதான். நோக்கு நிலை வேறு வேறாக இருக்கிறது.

**ஏகம் ஸத் விப்ரா: பஹுதா வதந்தி**

மேலே கூறிய எந்த முறையிலும் நோக்காமல் பார்த்த உடனேயே பாய்ந்து சிலந்தி வலையை அழிக்க முற்படும் குழந்தைகளும் உண்டு. இது ஒரு தனி ரகம். சிலந்தியின் கலைத்திறன், விஞ்ஞான மெய்ப்பாடு, தொய்வில்லாத ஆற்றல், ஆக்கம், ஆர்வம் இவை யாவற்றையும் தள்ளி நின்று கொண்டு ரசிக்கிறானே, அனுபவிக்கிறானே, அவனே உண்மையான ரசிகன், கவிஞன, விஞ்ஞானி, அறிவு ஜீவி, ரிஷி.

அத்யாத்ம யோகத்தில் ஈடுபட்ட ஞானிகளான நம் முனனோர்கள் தாங்கள் கண்டு அனுபவித்தவற்றை மற்றவர்களும் அனுபவிக்கவேண்டும். உலகிலுள்ள எல்லோருமே தங்களைப் போன்று மேல்நிலை யடைய வேண்டும் என்ற எண்ணத்துடன் தங்கள் அனுபவங்களை மெய்ஞானப் பெரு வெளியில் நின்று, சீடர்களின் நிலைக்கேற்றவாறு பக்குவமாக எடுத்துக் கூறினர். இவையே வேதங்கள. இவை சூத்திரங்கள் போன்று இருக்கவும், பல தரப்பட்ட பல நிலையிலுள்ள சீடர்களும் புரிந்து கொள்ள வேண்டும் என்ற கருணையினால் ஞானப் பெரு வெளியினின்று மேலும் இறங்கி வந்து இம்மெய்ஞான விளக்கங்களுக்கு விஞ்ஞான விளக்கங்கள் அளித்தனர். இவையே இதிகாசங்களும் புராணங்களும், ஸ்மிருதிகளும் ஆகமங்களும்.

ஒரே பொருள் அவரவர்கள் அனுபவ நிலையினின்று பேசப்படுகிறது. சீடர்களின் அறிவு நிலைக்கும் அனுபவ நிலைக்கும், ஏற்கும் திறனுக்கும் ஏற்றவாறு சொல்லப்படுகிறது. இதனால் தான் நமது சமய நூல்கள் ஒவ்வொன்றும் வேறு வேறாக இருப்பது போல

---

**ஸ்ரீ இராமானுஜ ஸ்வாமிகள்,**
**கும்பகோணம்.**

---

## புத்தியின் குணங்கள்

சூரியன் காற்றினும் கடிது செல்லும் குதிரைகளின் உதவியால் திசைகளை யெல்லாங் கடந்து செல்வதுபோல புத்தியின் சிந்தனை சக்திக்கும் வேகம் அதிகம்.

சூரியனின் குதிரைகள் ஏழு. நம் புத்தியின் குணங்களும் ஏழாகும். அவை:

1. புது விஷயங்களை அறிதற்கு ஆவல்
2. கேட்டல்
3. கொள்ளல்
4. நிலை நிறுத்தல்
5. பொருள்களின் கூறுபாட்டை யறிதல்
6. பொருள்களின் உணமையைப் பற்றுதல்
7. தத்துவத்தை தீர்மானமாக அறிதல் என்பன.

ஆதாரம்: ரகுவம்ஸ காவியம்.

## மனிதன் ஒரு கடன்காரன்

பிறக்கும் பொழுதே மனிதன் தேவர்கள், ரிஷிகள், பித்ருக்கள் இம்மூவருக்கும் செய்ய வேண்டிய மூன்று கடனுடையவனாகப் பிறக்கிறான்.

யாகஞ் செய்வதால் தேவர்களுடைய கடனும், சாஸ்திரங்களைப் படிப்பதால் ரிஷிகளின் கடனும், சந்ததியை யடைவதால் பித்ருக்களின் கடனும் தீருமென்பர்.

தவம், தானம் இவ்விரண்டும் மறு உலகிற்கே பயனளிக்கும். நல்ல புத்திரனே இம்மை மறுமை என்ற இரண்டிலும் நன்மையளிப்பான்.

ஆதாரம்: ரகுவம்ஸ காவியம்.

தகவல்: க. இராமலிங்கம்-புதுப்பேட்டை.

வும், மாறுபட்ட பல கருத்துக்களைத் தெரிவிப்பது போலவும் தோன்றுகின்றன. உண்மையில் இவையாவும் ஒன்றையே பேசுகின்றன, ஒரே கருத்தையே தெரிவிக்கின்றன.

நித்தமாய் மறைகட் கெல்லாம
நிதானமாம் பொருளாயுண்மைச
சுத்த அத்வைதமான
சுயம் பிரகாசமாகும்
ஆகையால் மறையுமொன்றே
அருமறைப் பொருளுமொன்றே.

யோக வாழ்வில் ஆன்ம நேய ஒருமைப் பாட்டில், தேவ ஜீவனத்தில் உண்மையான ஆர்வமும் நம்பிக்கையும் விசுவாசமும் வைப்பவனே வேத நெறி நின்று தேவ வாழ்வு பெறலாம், தேவ ராகங்களான வேத கானங்களின உண்மைப் பொருளையும் அறியலாம்.

கோடிக் கணக்கான மைல்களுக்கு அப்பால் விண்ணில் எங்கோ உறைகின்ற தேவர்கள் என்ற இனத்தவரைக் குறித்து கற்பனையில் எழுந்த சொற் சித்திரங்கள் என்றோ, இயற்கையைக் கண்டு வியந்து பயந்து போற்றிய அச்ச அகவல்கள் என்றோ, விபரீதமான வினை சடங்குகளின் பொருட்டு ஏற்பட்ட விதி மந்திரங்கள் என்றோ, சில மன்னர்களையும் மன்றங்களையும் போற்றி எழுந்த புகழ்ச்சிப் பாக்கள் என்றோ கருதாமல், உணர்வு மயமான மனிதனை அறிவு மயமாக்கி ஆனந்த மயமாக்கும், அற்புத அமர வாழ்வளிக்கும் சாவா மருந்து, வேத நல்விருந்து என்று கருதி அணுகுவோரே வேதங்களின் உண்மைப் பொருளை உள்ளபடி அறிய முடியும்.

அச்ரத்தாலோ: அவிச்வாஸோ ந
உதாஹரணமர்ஹதி |
ச்ரத்தாலுரபி ஸர்வத்ர வைதிகேஷு
அதிகாரத: ||

**வேத வித்யை :**

வேதம், ஞான விளக்கமென்றால், எதைப் பற்றிய ஞான விளக்கம்? அறிபவன், அறியப்படும் பொருள், அறிதல் என்ற தொழில் இம்மூன்றிற்கும் சாட்சியாக நின்று எது இயக்குகிறதோ, எதன் ஒளியினால் உலகிலுள்ள யாவுமே ஒளி பெற்றுத் திகழ்கிறதோ, இருட்டையும் வெளிச்சத்தையும் இருட்டாகவும் வெளிச்சமாகவும் எது வெளிச்சம் போட்டுக் காண்பிக்கிறதோ, ஒன்றெனவும், இரண்டெனவும், ஒன்றிரண்டெனவும் அன்றெனவும் எது விளங்குகிறதோ, விளக்குகிறதோ, விளக்கப்படுகிறதோ, பெரிதினும் பெரிதாய், சிறிதினும் சிறிதாய், அரிதினும் அரிதாய் நிற்கும் பொருள் எதுவோ, எங்கெங்கிருந்து ஏதேது வேண்டினாலும் அங்கங்கிருந்து வேண்டியன அருளும் அருளொளி எதுவோ, அதனைப் பற்றிய அறிவே ஞானம். இந்த ஞானத்தை விளக்குவதால், அளிப்பதால் வேதமே ஞானம் என வழங்கப்பட்டது. வேத வித்யை.

வேதம், அதனைச் சார்ந்த சமய நூல்கள் யாவும் வித்யை என்று சாஸ்திரங்கள் கூறும். இவை அனைத்துமே இறைவடிவம். ஆர்ஷ விதயை, அமர கானம், சாகாக் கல்வி.

அங்காணி வேதாஸ்ச்சத்வாரோ
மீமாம் ஸா நியாய விஸ்தர: |
புராணம் தர்ம சாஸ்த்ரம் ச வித்ய
ரதாஸ்சதுர்தச ||

**யயா ஸ தேவோ பகவான் வித்யயா**
**வித்யதே பர: |**
**ஸாக்ஷாதேவ ஹ்ரிஷீகேச: தத ஞான**
**மிதி கீர்த்திதம ||**

"ஆறு அங்கங்கள், நான்கு வேதங்கள், மீமாம்சை, நியாயம், புராணம், ஸ்மிருதி ஆகிய பதினான்கும் வித்தை எனப்படும். இவ்வித்தைகளின் மூலமே அழியாப் பரம்பொருளான, புலன்கள், மனம், புத்தி இவற்றின் ஈசனான பகவான் விஷ்ணு அறியப்படுவதால் இவை வித்தைகள் எனப்பட்டன. இதுவே ஞானம் என்று சொல்லப்படும்."

ஞானம் என்ற பொருளைத் தரும் 'வித்' எனும் தாதுவினின்றே வேதம், வித்தை என்ற இரு சொற்களும் எழுகின்றன. மேற்கண்ட கூற்றால் வேதம் முதலிய பதினான்கு வித்தைகளும் மேலான பிரம்ம ஞானத்தைப் பெறுவதற்கான சாதனங்கள் என்பது தெளிவாகிறது. எனவே இந்நூல்களில் அவித்யைக்கு, அதாவது கற்றவர்களும் மற்றவர்களும் கூறுவது போன்று அபத்தக் கற்பனைகளுக்கோ அல்லது வரலாற்றிற்கோ இடமில்லை என்பது தெளிவாகிறது.

இந்நூல்களின் ஒவ்வொரு வரியும் அதன் ஒவ்வொரு சொல்லும், சொல்லின் ஒவ்வொரு எழுத்தும், அதன் ஒலியும் உயிரும் மிக முக்கியமான கருத்தைக் கூறுகின்றன. இவை அனுபவ ஆர்ஷ கிரந்தங்கள் ஆதலின் நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஏற்க முடியவில்லை என்பதற்காகச் சில பகுதிகளை இடைச் செருகல் எனக்கூறித் தப்பித்தல் தவறானது. இவை என்றும் வாழும் ஜீவ சக்தி வாய்ந்த அமர கானங்கள். மேனாட்டார் கற்பித்துக் கொடுத்த வழியில் சென்று இடைச் செருகல்வாதத்தைக் கிளப்புவோரே சாஸ்திர பூமியினுள் நுழைந்த இடைச் செருகல்கள்; அழையா விருந்தாளிகள்.

**பராவித்யை அபரா வித்தை :**

பிரம்ம ஞானத்தை அடிப்படையாக வைத்தே இவை எல்லா விஷயங்

# ஸ்ரீ விஜயீந்திர குரு வைபவம்

ஸ்ரீ விஜயீந்திர தீர்த்தர் தன் குழந்தைப் பருவத்திலேயே ஸ்ரீ வியாசராஜ சுவாமிகளிடம் அர்ப்பணம் செய்யப்பட்டு அவரிடமே வளர்ந்து அவரிடமே கல்வி பயின்றார். நான்கு வேதங்களையும் அறுபத்து நான்கு கலைகளையும் கற்றுத் தேர்ந்து சகலகலாவல்லவராக விளங்கினார். ஸ்ரீவியாசராஜரின் வித்யா குருவுக்கு குருவான ஸ்ரீ விபுதேந்திர தீர்த்தர் என்பவரே ஸ்ரீ விஜயீந்திரராக பிறவி பூண்டு வந்தார். ஸ்ரீவியாசராஜர் ஸ்ரீ விஜயீந்திரர்மீது கொண்ட ஒப்பற்ற அன்புக்கும் ஆதரவுக்கும் இந்தப் பூர்வ ஜன்ம பிணைப்பும் ஒரு முக்கிய காரணமாக இருந்தது. ஸ்ரீ வியாசராஜர் உரிய காலத்தில் ஸ்ரீ விஜயீந்திரருக்கு சன்னியாச ஆஸ்ரமம் அளித்தார்.

தஞ்சை தரணியை ஆண்ட மன்னன் சேவப்ப நாயக்கனின் புலவர் அவையில் ஒளி வீசித் திகழ்ந்த மும்மணிகளுள் ஸ்ரீ விஜயீந்திரரும் ஒருவர். ஸ்ரீ அப்பய்ய தீட்சதரும் ஸ்ரீதாதாசார்யரும் மற்ற இருவர்கள்.

ஸ்ரீ விஜயீந்திரரின குண நலன்களையும் அறிவாற்றலையும் அறிந்திருந்த ஸ்ரீ சுமதீந்திர மடத்து பீடாதிபதி அவரைத் தமது மடத்துக்கு வழங்கிவிடும்படி ஸ்ரீ வியாசராஜரிடம் விரும்பி வேண்டினார். கோரிக்கையை மறுசக இயலவில்லை. ஸ்ரீ விஜயீந்திரரை ஸ்ரீ சுமதீந்திரமடத்துக்கு வழங்கினார். ஸ்ரீ விஜயீந்திரர் அங்கு சிஷ்யராக வந்து சேர்ந்து, பின்னர் அப்பீடாதிபதியின் மறைவுக்குப் பிறகு பீடாதிபதி பொறுப்பை ஏற்று புதுப்பொலிவுடன திகழ்ந்தார்.

ஸ்ரீ சுவாமிகள் பல அரிய நூல்களை இயற்றியும் தேச சஞ்சாரம் செய்தும் வேத நெறிகளையும் சமய போதனைகளையும் தீவிரமாய் பரப்பினார். சஞ்சாரம் மேற்கொண்ட சமயத்தில் விஜயநகர அரச குடும்பத்தினர்கள் ஸ்ரீ சுவாமிகளுக்கு ரத்னாபிஷேகம் செய்யும் பெரும் பாக்கியத்தைப் பெற்றார்கள்.

கும்பகோணம் ஸ்ரீ சாரங்கபாணி கோயிலை முஸ்லீம் மன்னர் ஆக்கிரமிப்பிலிருந்து பாதுகாத்தும், பொற்றாமரைக் குளம் உரிமையில் பிரச்சினை எழுந்தபோது அது ஸ்ரீ சாரங்கபாணி கோயிலுக்கே உரியது என்பதை நிலை நாட்டியும் ஸ்ரீ சுவாமிகள் மக்களின் பெரு மதிப்பையும் பேரன்பையும் பெற்றார். அதன காரணமாகவே இன்றும் ஸ்ரீ சாரங்கபாணி சுவாமியும் ஸ்ரீ சக்கரபாணி சுவாமியும் ஆண்டு தோறும் சித்திரைத் திருவிழா இரண்டாம் நாள் அன்று, ஸ்ரீ விஜயீந்திர மடத்துக்கு எழுந்தருளி ஸ்ரீமடத்து சம்பிரதாயப்படி அனைத்து உபசாரணைகளையும் ஏற்று அருளுகிறார்கள். ஸ்ரீ மங்களாம்பிகை திருச்சந்நதியில் யந்திர பிரதிஷ்டை செய்து ஸ்ரீ சுவாமிகள மக்களை மகிழ்வித்தார்.

கும்பகோணம் புண்ணிய தலத்தில் ஸ்ரீ சுவாமிகள் பிருந்தாவனம் கொண்டார். அன்று முதல் இன்று வரையில் ஸ்ரீ சுவாமிகளின் அருளாட்சி அங்கு தொடர்ந்து வருகிறது. கருணை மழையாய் காமதேனுவாய் விளங்கும் நம் பிரபுவை "ஸ்ரீ விஜயீந்திர குருவே!" என மனமுருக அழைத்து அவர் மலரடி பணிந்து வாழ்வு பெறுவோம்! வளம் பெறுவோம்! வாருங்கள்.

—ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

களையும் கூறுகின்றன. இந்த பிரம்ம ஞானம் அல்லது வேத வித்யை பரோக்ஷம் என்றும் அபரோக்ஷம் என்றும், அதாவது பராவித்யை என்றும் அபரா வித்யை என்றும் இரு வகைப் படும்.

த்வே வித்யே வேதி தவ்யே து சப்த
ப்ரஹ்ம பரந் ச யத் ||

சுருதியாக அதாவது சாதகனிடத்தில் பிரம்மத்தைப் பற்றிய அறிவு கேள்வி ஞானமாக மட்டும் இருக்கும் போது இந்த வித்யை அபரா வித்யை எனப்படும். செவியால் கேட்டவற்றை சாதனையின மூலம் அனுபவத்திற்குக் கொண்டு வந்து, தானே பிரம்மம் என்றறிந்து அதுவாகவே இருக்கும் ஞானம் பராவித்யை எனப் படும்.

அஸ்தி பிரம்மேதி சேத்வேத பரோக்ஷ
ஞான மேவ தத் |
அஹம் பிரம்மேதி சேத்வேத
ஸாக்ஷாத்காரஸ்ஸ உச்யதே ||

பரா வித்யையில் சாதகன் அனுபவிக்கும் பிரம்மத்திற்கு பரப்பிரும்மம் என்று பெயர். அபரா வித்யையில் அறியப்படும் பிரம்மத்திற்கு அபர பிரம்மம் என்று பெயர். அபரா வித்யையின் அனுபவ ஞானம் பரா வித்யை.

அபரா வித்யையில் அறியப்படும் பிரம்மமே அபர பிரும்மம், சப்த பிரும்மம், ஸகுண பிரும்மம், புராண புருஷன், ஸகள நிஷ்களம், ஸகுண நிர்க்குணம், பிரம்ம க்ஷத்ரம் என்று பல பெயர்களால் சாஸ்திரங்களில் விளக்கப்படுகின்றன.

சப்த பிரும்மத்தைத் தெளிவாகவும் முழுமையாகவும் தெரிந்து கொண்டாலே பரப்பிரும்மத்தை அடைய முடியும்.

சப்த ப்ரம்மணி நிஷ்ணுத: பரம்
ப்ரம்மாதிகச்சதி ||

சப்தப் பிரம்மம், அபர பிரம்மம் என்றால் என்ன? ஐம்பூதங்களால் ஆக்கப்பட்ட உடலில் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற அந்தக் கரணங்களோடு எப்போதும் அநாதியாக இணைந்திருக்கும் புராண புருஷனை பிரத்யகாத்மாவிற்கு சப்த பிரம்மம் அல்லது அபர பிரும்மம் என்று பெயர். நம் அனைவரையும் அந்தக் கரணங்களைக் கொண்டே சப்த பிரம்மம் இயக்குவதால் நாமும் இவற்றின் துணை கொண்டே அதனை அறிய வேண்டும், அடைய வேண்டும். அதனை அறியும் முறையையும், அடையும் முறையையும் பகரும் நூல்களே வேதம் முதலிய பதினான்கு வித்யைகளும்.

சுருதி:

வேதத்திற்கு 'சுருதி' என்றொரு பெயர் உண்டு. 'கேள்வி ஞானம்' என்று பொருள். இச்சொல்லிற்குப் பொருள கூற வந்த வெளிநாட்டு அறிஞர்களும், அவர்களின் அடிவருடிகளான நம் நாட்டைச் சேர்ந்த சில அறிஞர்களும், மிகவும் குழப்பிவிட்டனர்.

வேதம் ஓதலினாலும் ஓதுவித்தலினாலுமே கற்கப்பட்டு வந்தது. எனவே வேத காலத்தில் எழுத்தறிவு கிடையாது. சப்தங்களுக்கு எழுத்து வடிவம் பிற்காலத்திலேயே தரப்பட்டன. இது பலர் கருத்து.

வேதம் முதலிய பதினான்கு வித்யைகளும் எழுத்தறிவின்றியே எழுந்தன, வளர்ந்தன என்று கூறுதல் பேதமையன்றோ! ஸ்வரம், ராகம் இவற்றின் முக்கியத்துவத்தை உத்தேசித்து ஓதலிற்கு முதலிடம் கொடுத்தனர். இன்று போல் அச்சுத் தொழில் வளராமையினாலும் எல்லோரும் எழுதிக் காப்பாற்றுதல் இயலாது ஆகையாலும் ஓதலிற்கு முதலிடம் அளித்தனர்.

இசைக் கலை எவ்வாறு வளர்ந்தது? ஆதி நாள் துவங்கி வாய் மூலமே கற்கப்பட்டும், கற்பிக்கப்பட்டும் வருகிறது. வேறு எப்படித்தான் கற்பிப்பது? உடனே ஸ்வரங்களுக்கும், ராகங்களுக்கும், சாகித்யங்களுக்கும் பண்டை நாட்களில் எழுத்து வடிவம் கிடையாது என்று கூறுதல் பொருந்துமா.

நீதி மன்றங்களில் வழக்குகள் விசாரணை செய்யுங் காலத்து சாட்சிகளின் நேரடி வாக்கு மூலங்களுக்கே (Oral evidence) அதிக முக்கியத்துவம் அளிக்கப்படும். பிறகுதான் மற்ற சாட்சியங்கள் கருதப்படும். இதனால் நீதித் துறையினருக்கு எழுத்தறிவு கிடையாது எனக் கூறலாமா.

பிரமாணங்கள் மொத்தம் ஆறு. அவற்றுள் சுருதிப் பிரமாணம் (Oral evidence) மிக முக்கியமானது. வேதங்கள் சுருதி பிரமாணங்கள். ரிஷி என்ற அனுபவ ஞானத்தின் நேரடி வாக்கு மூலங்கள். வேதமே சுருதியாயிற்று. சுருதி வேதமாயிற்று.

ஒருவன் தான் அனுபவித்தறிந்த விஷயத்தை அதிகாரியான சீடனுக்கு உபதேசம் செய்தவுடன், அந்த சீடனுக்கு குரு வாக்கியத்தால் கிடைக்கும் ஞானத்திற்கு சுருதி ஞானம் என்று பெயர். அதாவது கேள்வி ஞானம். குருவின் அனுபவ ஞானத்திற்கு 'ரிஷி' என்று பெயர். 'ரிஷி தர்சனாத்' 'ரிஷி'யைப் பற்றி பின்னர் விரிவாகக் காண்போம். சீடன் பெற்ற கேள்வி ஞானம் சுருதி. இதுவே வேதம். இந்நிலையில் சீடன் பெற்றுள்ள ஞானம் வெறும் கேள்வி ஞானமாக மட்டுமே இருக்கிறது.

இவன் குரு உபதேசத்தைத் தொடர்ந்து யோகம் பயின்று சாதனை புரிந்தால் கேள்வி ஞானம் அனுபவத்திற்கு வரும். அப்போது இவனும் ரிஷியாகிறான்.

சுருதி என்பதன் பொருள் இதுவே. எழுத்தறிவு பற்றிய சர்ச்சையே இங்கு எழவில்லை. அச்சுத் தொழில் மிகவும் முன்னேறியுள்ள இக்காலத்தில்கூட உலகம் நேரடியாகப் பேசப்படும் பிரமாணத்திற்கே முதலிடம் கொடுக்கிறது அன்றோ.

(35-ம் பக்கம் பார்க்க)

# குலசேகராழ்வாரின் அன்புநெறி



**முன்னுரை**

இறைநெறியும், அன்பு நெறியும் ஒன்றே. "அன்பெனும் பிடியுள் அகப்படும் மலை" என இறைநெறி பற்றி வடலூர் வள்ளல் வாய்மலர்ந்தருளினர். திருமூலரும், "அன்பு, சிவம் இரண்டு வேறன்று; அன்பே சிவம்" எனவும் நிலை நாட்டியுள்ளார். உயிர்களிடத்துக் கருணை காட்டுதல் பக்தி நெறியின் முதற்படியாகும். கருணை இல்லாத உள்ளம் பக்தி நெறிக்கு ஏற்புடைத்தன்று. வாடிய பயிரைக் கண்ட போது எல்லாம் வாடிய வடலூரார் உள்ளம் அன்பு மயமானது. பக்தி நெறியினைப் பின்பற்ற விரும்பும் அன்பர்கள் உயிர்களிடத்துக்கருணையோடு நடந்து கொள்வதோடு, எவ்வுயிரும் தம்முயிர் போல் எண்ணும் ஒத்துரிமை உணர்வுடையராதல் வேண்டும். அதுவே தன் உயிருக்கு நலம் தேடிக் கொள்ளும் வழியாகும்.

**திருவேடம் :**

மெய்ப்பொருள நாயனார் அடியார் திருவேடமே மெய்யெனக்கொணடு உய்வு பெற்றார். முத்தனாதன் பொய் வேடம் பூண்டு மெய்யடியாரைக் கொன்றதால் அழியாத பழியினை அடைந்தான.

கள்ள மனமுடைய சிலர் தம்மை நல்லவர் போலக் காட்டிடப் பக்தி வேடம் பூணுகினறனர். அன்னார் தாங்கிய திருவேடம் மெய்யடியாரிடத்துக் கொள்ளும் அனபைத் தடை செய்வதாகவும், மெய்யடியார் பால் பொய்யடியாரின் தன்மையை ஏற்றி ஏளனம் செய்யவும் இடமளிக்கின்றது. இறைவன்பெயரில் திருவேடம்தாங்கி ஏமாற்றும் எத்தர்கள் எககாலத்திலும் இருந்துள்ளனர். இதனைத் திருவள்ளுவர் கூறும்,

**"மனத்தது மாசாக மாண்டார் நீராடி**
**மறைந்தொழுகு மாந்தர் பலர்"**

என்ற பாடலால் அறியலாம்.

மெய்யடியார்கள் தம்மை ஒரு போதும் இனம் காட்டி விளம்பரம் செய்து கொள்ளமாட்டார்கள். எவர் ஒருவர் தம்மை விளம்பரம் செய்து கொள்ளத தலைப்படுகின்றாரோ அவரது இறைநெறியும் போலித்தனம் உடையதாகவே கருதப்படும்

திரு. லிக்மார்த்தாண்டன,
இராசபாளையம்.

**அடியார்களின் அன்பு நெறி :**

இறைவன் பால் உண்மை அன்பு கொணட ஆழ்வார்கள், நாயன்மார்கள பரசமய இருளறுத்து உண்மையை நிலை நாட்ட எண்ணினர். எனவே இறைநெறி தழைததது. அவர்கள் இறைப்பணி புரியத்தோன்றிய அருளாளர்கள. இறைநெறியில் ஒன்றிய அன்னார் உள்ளம் இறைநினைவில் ஒன்றித் தான் வேறு; இறைவன் வேறு என்ற பிரிப்பிலாத் தன்மை கொண்டது. அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய பாசுரஙகள் இறைநெறியில் நம்

மை இட்டுச் செல்லவல்ல தன்மை கொண்டனவாகும். அது மட்டுமன்றி இறைநெறியில் ஒன்றித் தோய்ந்த அவர்களது அன்பு நெறியினை நாம் அறிந்து கொள்ளவும் துணை புரிகின்றன.

மெய்யடியார்கள் உயிர்களிடத்துக் கருணையும், இறைநெறியில் ஒன்றித் தோய்ந்த உள்ளமும் வாய்க்கப் பெற்றதால்,

“ யான் பெற்ற இன்பம் பெறுக
இவ்வையகம் ”

எனக் கூறினர். இத்தன்மை அவர் தம் அருட்பாடல்களில் காண்கிறோம்.

அடியார்கள் இறைவன் புகழை மக்கள் ஓதி உணர வழிகாட்டிய நெறி அன்பு நெறியாகும். இத்தன்மையினைக் குலசேகராழ்வாரின் பாசுரங்களில் காண முடிகின்றது. திருமாலிடத்து ஆராக்காதல் கொண்ட இவ்வாழ்வாரின் பாசுரங்கள் உள்ளத்தை உருக்கும் தன்மை கொண்டனவாகும். இப்பாடல்களை ஓதி உணர்கின்றவர்கள் ஆழ்வார் காட்டிய அன்புநெறியின் உண்மையை அறிந்து உயர்வு பெறுவர்.

**ஆழ்வாரின் அன்பு நெறி:**

இறைவனைத் தந்தையாகவும் தன்னைப் பிள்ளையாகவும் கொண்டு வழிபடும் பக்தி நெறியினைச் சான்றோர் “சற்புத்திரமார்க்கம்” என்கின்றனர். குலசேகராழ்வார் திருவித்துவக்கோடு என்னும் தலத்தில் எழுந்தருளி இருக்கும் திருமாலைத் தாயாகவும் தன்னைப் பிள்ளையாகவும்கொண்டு

“ அரிசினத்தா லீன்றதாய்
அகற்றிடினும் மற்றவள்தன்
அருள் நினைந்தே யழுங்குழவி
அதுவே போன்றிருந்தேனே ”

என்பதால் தனது உள்ள நிலையைத் தெற்றெனப் புலப்படுத்துவதோடு உலகோர்க்கும் அந்நெறியைத் தெளிவுபடுத்தக் காணலாம். இதனைச் சாபல்யம் எனப்படும் மகாபாவம் என வடநாட்டார் கூறுகின்றனர். அஃதாவது குழந்தை, தாயை நினைந்து ஏங்கும் பதைபதைப்பு பக்தனிடம் அமைந்திருத்தல் என விளக்கம் செய்யலாம். சைவ சமயக்குரவர்கள் நால்வருள் திருஞான சம்பந்தர் இந்நெறியைப் பின்பற்றிச் சாலோகபதம் பெற்றமை இங்குக் கருதற்பாலதாம்.

திருவில்லிபுத்தூரில் ஆண்டாள் இறைவனை நாயகனாகவும், தன்னை நாயகியாகவும் கருதி வழிபட்டநெறியும், மாணிக்கவாசகர் திருக்கோவையார் இயற்றக் காரணமான நெறியும் “காந்தா பாவனை” எனப்படும். இதேவித பாவனை குலசேகராழ்வார் கொண்டிருந்தார். எனவே,

“ கண்டா ரிகழ்வனவே காதலன்றான்
செய்திடினும்
கொண்டானை யல்லால் அறியாக்
குலமகள் போல் ”

திகழ்ந்தார். கற்புடைய பெண்ணுக்குக் கணவனையன்றிக் கதியில்லாதவாறு போலப் பக்தனுக்கு இறைவனையன்றி வேறு கதியில்லை எனக் கருதுதல் சிறந்த அன்பு நெறியாகும் எனத் தெளியலாம்.

இறைவனை ஆண்டானாகவும், தன்னை அவன் அடிமையாகவும் கருதி வழிபடும் நெறி “தாச மார்க்கம்” எனப்படும். இந்நெறியினைத்

“ தான் நோக்கா தெத்துயரம்
செய்திடினும் தார் வேந்தன்
கோல் நோக்கி வாழும் குடி
போன்றிருந்தேனே ”

எனக் குலசேகராழ்வார் பொழிந்துள்ளமை கொண்டு தெளியலாம். ஆழ்வார் கூற்றோடு,


*Statement about ownership and other particulars about*

**SAPTHAGIRI**
**(MONTHLY)**
FORM IV
*See Rule* 8)

| | | |
|---|---|---|
| 1 | Place of publication | ... TIRUPATI. |
| 2 | Periodicity of its publication | . Monthly |
| 3 | Honorary Editor | .. Sri Ch. Venkatapathi Raju, I.A.S. Executive Officer, T.T.D |
| 4 | Printer's Name<br>Whether citizen of India<br>Address | Sri M. Vijayakumar Reddy, L.P.T.,<br>. Yes<br>.. Manager, T.T.D. Printing Press, Tirupati. |
| 5 | Editor & Publisher's Name<br>Whether citizen of India<br>Address | .. K. Subba Rao, M.A.,<br>... Yes<br>Editor, Sapthagiri, T.T.D. Journal, Tirupati. |
| 6 | Names and addresses of individuals who own the Newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital. | .. Board of Trustees represented by the Executive Officer on behalf of T. T. D., Tirupati. |

*I, K. Subba Rao, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

TIRUPATI,
*Date*: 28-2-1990.

(*Sd.*) **K. SUBBA RAO,**
*Signature of the Publisher.*

" நாமார்க்கும் குடி அல்லோம்
நமனை அஞ்சோம் "

என்ற திருநாவுக்கரசரின் மொழிகளை ஒப்பு நோக்கிக் காண அடியார்கள் இறைவனுடைய குடிமக்களாவர் எனத் தெளியலாம். குடிகள் மன்னனது தண்ணளியை எதிர் நோக்கி நிற்றலைப் போல் பக்திநெறியில் செல்ல விரும்புவோர் இறைவனது அருள் தாகத்தை எதிர்நோக்கி நிற்கும் மனநிலை பெறுதல் வேண்டும் எனத் தெளியலாம்.

மெய்யடியார்கள், "எல்லாம் அவன்செயல்", எனவும், "அவனன்றி அணுவும் அசையாது", எனவும் அசைக்கமுடியாத நம்பிக்கை கொண்டிருந்தனர். மருத்துவன் பிணியாளனின் பிணியைப் போக்கக் கத்தியைக் கொண்டு அறுத்தாலும், பழுக்கக் காய்ச்சிய ஊசியைக் கொண்டு சுட்டாலும் அம்மருத்துவனையே நேயம் கொள்ளும் நோயாளனைப் போலக் குலசேகர ஆழ்வார் தனக் குற்ற மீளாத்துயர்களை இறைவனே போக்கல் வேண்டும் எனத் தன் அடிமைத் திறத்தைப் புலப்படுத்துகின்றார்.

குலசேகராழ்வார் திருமாலிடத்துக் கொண்ட பக்தியைத் தவிர வேறு ஏதையும் அறியாதவர் ஆனார். இந்நிலையில் தனது உள்ளம் ஒருநிலையுற்ற திறத்தை.

" எங்கும் போய்க் கரைகாணு
தெறிகடல்வாய் மீண்டேயும்
வங்கத்தின கூம்பேறும் மாப்பறவை
போன்றேனே "

எனப் புலப்படுத்துகின்றார். இப்பாடலால் உள்ளம் அலைபாயும் நிலையுற்ற உலகியலார் இறைவன் திருவடியே கதியெனக் கொண்டு திகழ வேண்டும் எனற கருத்து வலிவு பெறுகின்றது.

உலகியலார் மூவாசை மயக்கால் இறைவனை மறந்து வாழ்ந்தாலும் முடிவில் இறைவனைத் தஞ்சம்அடைந்தே தீரவேண்டும் என்ற கருத்தும் புலப்படக் காணலாம்.

மெய்யடியார்கள் இறையருளே தனது துயரைப் போகக வேணடும் எனக் கருதினர். அவர் தம் உள்ளம் இறையருள் புரியும் திறத்தை எண்ணி உருக விழைந்தது. இந்நிலையினைக் குலசேகராழ்வார்,

" செந்தழலே வந்தழலைச் செய்திடினும்
செங்கமலம்
அந்தரஞ்சேர் செங்கதிரோற்
கல்லால் அலராவால் "

எனக் குறிப்பிடுகின்றார்.

இறைநெறியில் நிற்றற்கு விழையும் ஆழ்வார் உள்ளம் அருள் தாகத்தில் தோய்ந்து கிடந்தது. எனவே,

" எத்துணையும் வான்மறந்த காலத்தும்
பைங்கூழ்கள்
மைத்தெழுந்த மாமுகிலே
பார்த்திருக்கும் "

எனக்குறிப்பிடுகின்றார்.

இறைநினைவில் ஒன்றித் தோய்ந்த ஆழ்வார் உள்ளம்பசிய பயிர்போன்று திகழ்ந்தது. வானம் பயிரை மறந்தாலும், பயிர்கள் மழை தரும் வானை மறவாது எதிர்நோக்கி நிற்கும். அதுபோல இறையடியார்கள் இறைவன் தன்னை மறப்பினும் இறைவனைத்தான் மறவா நிலை கொண்டிருந்தனர். இதனை,

" நற்றவத்தவர் உள்ளிருந்தோங்கும்
நமசிவாயத்தை நான்மறவேனே "

என்ற இராமலிங்கர் கூற்றுல் தெளியலாம்.

மனம் காட்டாறு போன்று எங்கெங்கு அலைநது திரியினும் இறையருட் கடலிற் சங்கமமாகியே தீரவேண்டும். சமயங்கள் எனனும் நதிகள் இறைவன் என்னும் பெருங்கடலில் சங்கமம் ஆகின்றன என இராமலிங்கர் கூறியுள்ளார்.

இறையடியார்கள் செல்வத்தில் பற்றின்றி இறையருட் செல்வத்தைப் பெற விழைந்தனர். செல்வத்தின் இயல்பு தன்னை விரும்பாதவரையே சென்றடையும். அதுபோல இறைவன் விரும்பாவிடினும் மெய்யடியார்கள் இறைவனையே விரும்பிநின்றனர். இத்தன்மையினைக் குலசேகராழ்வார்,

" நின்னையே தான் வேண்டி
நீள்செல்வம் வேண்டாதான்
தன்னையே தான்வேண்டும்
செல்வம் போல்
.................................
நின்னையே தானவேண்டி நிற்ப
னடியேனே "

எனக் கூறுவதால் தெளியலாம்.

முடிவுரை :

இறையடியார்கள் சென்ற இறைநெறியினை அவர்தம் அருட்பாடல்கள் தெளிவு செய்கின்றன. இவ்வகையில் குலசேகராழ்வார் இறைநெறியில் கொண்டிருந்த அன்புநெறியினை இக் கட்டுரை வலியுறுத்தக் காணலாம். இறைநெறி செல்ல விழையும் உண்மையன்பர்கள் குலசேகராழ்வார் கொணடிருந்த அதிதீவிரப் பக்திநிலையினை உணர்நது அவர் தம் அருட்பாடல்களை ஓதி உணர்ந்து இன்புறுவோமாக!





ஓம் ஸ்ரீ மாத்ரே நம :





# பொதுமக்களுக்கு ஓர் அரிய நற்செய்தி



**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்கள் ஆசி வழங்கிய நவசக்தி நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்கு உரிய தெய்வீக சாதனங்கள்.**

| வ.எண். | யந்திரங்களின் பெயரும் அதன் பலன்களும் | விலை ரூ.பை. |
|---|---|---|
| 1. | பூர்ண ஸ்ரீ சக்கர மகாமேரு பஞ்சலோகம் அனைத்துத் தெய்வங்களும் இதில் அடங்கியது (மர பீடம உட்பட) 6½×6½ செ. மீ. ரூ. 750/- 5×5 செ. மீ. | 450-00 |
| 2. | ஸ்ரீ மகா கணபதி 8×8 செ. மீ. எந்தக் காரியமும் தடையின்றி நடக்க | 130-00 |
| 3. | ஸ்ரீ சக்கரம் 8×8செ.மீ. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது | 130-00 |
| 4. | ஸ்ரீ மகாலட்சுமி மகாயந்திரம் 24×24 செ. மீ. 300 ஆண்டுகளுக்கு லட்சுமி கடாட்சத்தை ஏற்படுத்தி நிலைத்திருககச் செய்யும் (கோல்ட் பிரேம்) | 1150-00 |
| 5. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீ சாம்ராஜ்யலட்சுமி ஸ்ரீ மகா சுதர்சனம் 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) (மூன்று யந்திரங்கள் சேர்த்து) வியாபாரத்தில் விருத்தியடையவும் லட்சுமி கடாட்சம், பண வரவுககும், எதிரிகள் பொறாமை இவைகளை நீக்கி சுபிட்சத்தை உண்டுபண்ணும் | 1750-00 |
| 6. | சர்வ ஜன மன தன ஆகாஷணம் சாம்ராஜ்ய லட்சுமி ஸ்ரீ சுதர்சனம் 8×24 செ. மீ. (கோல்டு பிரேம்) மேறகண்ட பலனை தரவல்லது | 500-00 |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா 8×24 செ.மீ. (கோல்டு பிரேம்) | 500-00 |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா, 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சேர்ந்தது வியாபாரததிலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீக்கி எதிரிகள் இல்லாமல் செய்யவும் பில்லி, சூனியம், ஏவல்களை நீக்கி, லட்சுமி கடாட்சம் தரவல்லது. | 1750-00 |
| 9. | ரசமணி ஒன்றின் விலை ரூ. 250/-, ரூ. 500/- இது மனதை ஒரு நிலைபடுத்தும், சர்வ காரிய சித்தியும் சுகபோக பாக்கியங்களையும் தரவல்லது. | |
| 10. | கண் திருஷ்டி ஒருபுறம். மறுபுறம் சுதர்சன டாலர். கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாதுகாக்க வல்லது. | 70-00 |
| 11. | ஸ்ரீ சக்கரம் ஒருபுறம், மறுபுறம் ஸ்ரீ காமாட்சி டாலர். அம்பாள் கடாட்சத்தை ஏற்படுத்திச் சிரமங்களை நீக்க வல்லது. | 70-00 |
| 12. | ஸ்ரீ காமட்சி ஒருபுறம், மறுபுறம் தனகர்ஷண டாலர். அம்பாள் கடாட்சமும், பொருள் வரவும் தரவல்லது. | 70-00 |
| 13. | சௌடாம்பிகை மாங்கல்ய பாக்கிய டாலர். அம்பாள் கடாட்சமும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உண்டாக்கவும வல்லது. | 70-00 |
| 14. | விவாகப்ராப்தி டாலர். தடைப்பட்டு வநததிருமணம் தடையின்றி நடக்கும | 70-00 |
| 15. | ஸ்ரீ சக்கரம் லட்சுமி பீஜம் டாலர் அம்பாள் கடாட்சத்தை நிலைத்திருக்கச் செய்யவல்லது | 70-00 |
| 16. | கண் திருஷ்டி படம் (கோல்டு பிரேம்) வீட்டிலும் வியாபாரத்திலும் வைப்பதால் கண் திருஷ்டி தொல்லைகளை நீக்கி விபத்துக்களைத் தடுத்துக் காப்பாற்ற வல்லது | 70-00 |
| 17. | தத்தாத்ரேயர் யந்தரம் 12×12 செ. மீ. (கோல்டு பிரேம்) கண் திருஷ்டி, பொறாமை, துர்தேவதைகளால் ஏற்படும் தொல்லைகளை நீக்கிக் காப்பாற்ற வல்லது | 150-00 |
| 18. | பூஜைக்கு உரிய பஞ்சாயதன செட்டும், பாணலிங்கம், ஸ்படிக லிங்ககம் பலவிதமான மாலைகள் மாலைகள் சுத்த வெள்ளியால செய்யப்பட்டவையும் இன்னும் பலவிதமான சாதனங்களும் கிடைக்கும் பூஜைக்குரிய பாதுகை இங்கு கிடைக்கும். | |

கோவில்களுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும், கிராம தேவதைகளுக்குரிய சகல யந்தரங்களும் கிடைக்கும். ஒன்றின் விலை ரூ. 105/- ஸ்பெஷல்: கோவிலில் ஜன ஆகர்ஷணம், தன ஆகர்ஷணம் செய்யக்கூடிய யந்தரத்தில் விலை ரூ. 300/- வெளிநாட்டுக்கு 25% அதிகம். விலைப்பட்டியலுக்கு 0-50 பைசா தபால் தலையுடன் கீழ்க்கண்ட விலாசத்திற்கு விண்ணப்பிக்கவும். மேற்கண்ட யந்திரங்களின் பலன்களை ஓரளவுதான பத்திரிகைகளில் தெரிவிக்க முடியும்.


ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர், தலைவர் நவசக்தி நிலையம்,

153, லாயட்ஸ ரோடு, (ஸடேட் பேங்க எதிரில), கோபாலபுரம், சென்னை - 600086.

**போன் : கடை ... 472013 மா மேரு டிரஸ்டு வீடு: ... 861254**


**" லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து "**

# இறைவனின் திருநாமப் பெருமை

இறைவனுக்கென்று சொந்தமாக ஒரு பெயரோ ஒரு உருவமோ கிடையாது. அப்படி இருப்பதாலேயே அவன் பல பெயர்களையும் பல உருவங்களையும் ஏற்க நேரிடுகிறது.

எப்படி ?

ஒருவர் சென்றவருடம் ஒருவீட்டில் குடியிருந்தார். ஆறுமாதம் கழித்துப் பார்த்தபோது அவர் வேறு ஒரு வீட்டில் குடியிருந்தார். இப்போது இன்னொரு வீட்டில் குடியிருக்கிறார். ஏன் இப்படி அவர் குடிபெயர்ந்து கொண்டே இருக்கிறார்? என்று எண்ணியபோது, அவருக்கென்று சொந்தமாக ஒரு வீடில்லை என்பது தெரிய வந்தது. சொந்தமாக ஒரு வீடு இருந்தால் அப்படி அவர் குடிபெயர நேருமா ? நேராது.



அதுபோலத்தான் இறைவனும். சொந்தமாக ஒரு வீடு இல்லாதவர் எப்படி பல வீடுகளில் குடியிருக்க நேர்கிறதோ அப்படி, சொந்தமாக ஒரு பெயரோ ஒரு உருவமோ இல்லாத இறைவனும் பல பெயர்களைப் பல உருவங்களை ஏற்க நேரிடுகிறது.

இப்படி, அவன் ஏற்க அவனுக்குப் பல பெயர்களையும் பல உருவங்களையும் ஈந்தவர்கள் அடியார்களாவர். இதை,

"ஒரு நாமம் ஒருருவம் ஒன்றுமில்
லாற் காயிரந்
திருநாமம் பாடிநாந் தெள்ளேணம்
கொட்டாமோ"

(மாணிக்கவாசகர்—திருவாசகம்—
திருத்தெள்ளேணம்—1)

என்ற திருமுறைப் பாடலும்,



"தமர் உகந்தது எவ்வுருவம் அவ்
வுருவம் தானே
தமர் உகந்தது எப்பேர் மற்று
அப்பேர்—தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித்து இமையா
திருப்பரே
அவ்வண்ணம் ஆழியானும்"

(பொய்கையாழ்வார்—இயற்பா—
முதற் திருவந்தாதி—44)

என்ற திவ்வியபிரபந்தப் பாடலாலும் உணரலாம்.

இவ்வாறு இறைவனுக்கு அடியார்கள் ஈந்த திருவுருவங்கள் திருநாமங்கள் இரண்டில் திருநாமங்களே அவனுடைய சொந்தத் திருநாமங்களாக

**திரு பே. ச. கர்ணசேகரன்,**
**கோவை—2.**

ஆகிவிட்டன. திருவுருவங்களோ அவனுடைய தேகோமயமான உருவத்தை நினைப்பூட்டும் அடையாளமாகத்தான் விளங்குகின்றன. இதை,

"பல நூறு மைல்களுக்கு அப்பாலுள்ள ஒரு பெண்ணின் படத்தை வருவித்துக் கல்யாணம் செய்து கொள்ள விரும்பும் பிள்ளைக்குக் காட்டுகிறோம். அந்தப் படமே அவள் அல்ல. ஆனால் ஓரளவு அவளுடைய வடிவத்தைப் புலப்படுத்தும் அடையாளமாக இருக்கிறது. அதுபோலவே விக்கிரகங்கள் இறைவனுடைய ஒளியுருவங்களின் 'போட்டோக்கள்': சாட்சாத் உருவங்களே அல்ல.

ஆனால், அவனுடைய திருநாமங்கள் அத்தகையன அல்ல. அவை வேறு திருநாமங்களின் பிரதி அல்ல. இறைவனுடைய சொந்தத் திருநாமங்களே அவை. ஆகவே நாம் கண்ணால் காணும் இறைவன் திருவுருவங்களும் காதில் கேட்கும் திருநாமங்களும் ஒரே தன்மையுடையவை என்று எண்ணக் கூடாது. உருவங்கள் நிழற் படங்கள் போன்றவை; நாமங்கள் உண்மையான மூல நாமங்களே".

(அநுபூதி விளக்கம், பக்கம்—215)

என்று விளங்குகிறார் வாகீச கலாநிதி கி. வா. ஜகந்நாதன் அவர்கள்.

இப்படி இறைவனுக்கு அடியார்கள் ஈந்தத் திருநாமங்கள் அவனுடைய சொந்தத் திருநாமங்களாகவே ஆகிவிட்டதால்தான், அவ்இறைவனுக்கு உருவமில்லை என்று கூறும் சில சமயத்தினர்கூட அவனுக்குத் திருநாமம் இல்லைஎன்று சொல்லுவதில்லை. அவர்கள் அவனைப் 'பரமபிதா' என்றோ 'அல்லா'என்றோ அழைக்கிறார்கள்.

ஆக, இவற்றால் இறைவனுக்கு அடியார்கள் ஈந்தத் திருவுருவங்களைவிடத்



திருமலைக் கோயில் உத்ஸவர்

திருநாமங்கள் சிறந்தவை என்பது தெளிவாகிறது.

இப்படித் திருநாமங்கள் சிறந்தவையாக இருந்தென்ன? அவை, எல்லோருக்கும் எப்போதும் எந்நேரமும் மிக எளிதாக மிகச் சாதாரணமாகப் பயன்படுமாறு இருந்தாலேயே மேலும் சிறந்தவையாக இலங்கும். ஆம்! ஒரு பொருள் எத்துணைதான் சிறந்ததாக விளங்கினாலும் அது பயன்படும் விதத்தைப் பொறுத்தே அதன் பெருமை கூடவோ குறையவோ செய்யும்.

இந்த வகையில் இறைவனின் திருநாமங்கள் பயன்படுமாறு விளங்குகின்றனவா? ஆம்! பயன்படுமாறே விளங்குகின்றன. சொல்லப்போனால் இறைவனையும்விட அவனுடைய திருநாமங்கள், எல்லோருக்கும் எப்போதும எவ்விடத்தும் மிக எளிதாக மிகச் சாதாரணமாகப் பயன்படுவனவாகவே விளங்குகின்றன எனலாம். எப்படி?

இறைவனுக்கு இரண்டு நிலைகள் உண்டு. ஒன்று, நாமரூபமற்றவனாய் அனைத்தையும் கடந்தவனாய் இருக்கும் நிலை; மற்றொன்று, நாமமும் உருவமும்கூடிய நிலை.

முதல் நிலையிலுள்ள இறைவனை அனைவராலும் காண முடியாது. இறைவனின் அருளைப்பெற்றவர்களாலேயே அவ்வருளின் துணை கொண்டு அமமுதல் நிலையிலுள்ள அவனைக் காணமுடியும். இதை,

“அவனருளே கண்ணாகக் காணினல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே”

என்று குறிப்பிடுகிறார் திருநாவுக்கரசர். எனவே, இந்நிலையிலுள்ள இறைவன் சாதாரணமாக அனைவருக்கும் பயன்படுவதில்லை

இரண்டாம் நிலையில் இறைவன் அனைவருக்கும் பயன்படுமாறுள்ளான். ஆம்! திருவுருவங்கள் மூலமும் திருநாமங்கள் மூலமும் அவன் நமக்குப் பயன்படுகின்றான். இவ்விரண்டிலும் திருநாமங்களே எல்லோருக்கும் எவ்விடத்திலும் எந்நேரத்திலும் மிக எளிதாக மிகச் சாதாரணமாக பயன்படுமாறுள்ளன.

எப்படி?

திருவுருவங்கள் சில குறிப்பிட்ட இடங்களிலேயே இருப்பவை. திருக்கோயில், வீட்டிலுள்ள பூசை அறை ஆகியவையே அவை உள்ள இடங்கள். எனவே அவைஎங்கும் காணக்கூடியனவாக இல்லை. ஆனால், திருநாமங்களோ எங்கும் உச்சரிக்கக் கூடியனவாக இருக்கின்றன.

குறிப்பிட்ட இடங்களிலுள்ள இத்திருவுருவங்களை எல்லா நேரங்களிலும் காண முடியாது. குறிப்பிட்ட சில நேரங்களிலேதான் காண முடியும. ஆனல, திருநாமங்கள் எந்த நேரத்திலும் உச்சரிக்கக்கூடியனவாக உள்ளன.

குறிப்பிட்ட சில இடங்களில், குறிப்பிட்ட சிலநேரங்களில் காணககூடியனவாக இருந்தாலும் திருவுருவங்களை அனைவராலும் காண முடிகிறதா? இல்லை. கண்ணில்லாததால குருடர்களால் காண முடிவதில்லை; காலில்லாததால் முடவர்களால் சென்று காண முடிவதில்லை.

ஆனால், அப்படிக் காண முடியாதவர்களால் திருநாமத்தை உச்சரிக்க முடியுமல்லவா? முடியும். எனவே,

அனைவராலும் உச்சரிப்பதற்குரியன திருநாமங்கள் எனலாம்.

வாய் பேச முடியாத ஊமையால் திருநாமங்களை உச்சரிக்க முடியாத போது அனைவராலும் திருநாமங்களை உச்சரிக்க முடியும் என்று கூறுவது தவறல்லவா? என்று கேட்கலாம்

திருநாமங்களை வாய்விட்டுச சுதத மாகததான் உ ச் ச ரி க் க வேண்டும் என்பது அவசியமில்லை; மனததி னுள்ளே நினைத்தாலுமபோதும். இதை,

"துஞ்சதுந் துஞ்சலி லாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமின் நாள் தொறும்
வஞ்சகம் அறறடி வாழ்த்த வந்த கூற்
றஞ்சவுதைத்தன அஞ்செழுத்துமே''
(திருஞானசம்பநதர், 3ம் திருமுறை)
பஞ்சாக்கரத் திருப்பதிகம், 1)

என்ற திருமுறைப் பாடலால் உணர லாம்.

வாய்பேச முடியாதவனால் அப்படி மனத்தினுள்ளே திருநாமங்களை உச்ச ரிக்க முடியும். எனவே, அனைவரா லும் உச்சரிப்பதற்குரியவை திரு நாமங்கள் எனலாம்.

இவ்வாறு, எங்குமஎந்நேரத்திலும் எல்லோரும் உசசரிப்பதற்குரியன வாக விளங்குகினறன இறைவனின் திருநாமங்கள.

ஆக, உருவமற்ற நிலையிலும் சரி, உருவமும் நாமமும் உடைய நிலை யிலும் சரி, இறைவனை விட அவ னுடைய திருநாமங்களே எஙகும் எந் நேரத்திலும் எல்லோருக்கும் மிக எளி தாக, மிக சாதாரணமாகப் பயன்படு மாறுள்ளன எனபது தெளிவாகிறது.

இதை,

"கட்டிப் பொனபோலே அவன (இறைவன்)
பணிப் பொன் போலே திருநாமம்"
(திருப்பாவை வியாக்யானம்)

என்றும்;



ஸ்ரீவில்லிபுத்தூர் ராஜகோபுரம்

"தேவரீரைப் போலேயோ திருநாமம்? கட்டிப்
பொன்னுக்கும்பணிப்பொன்னுக்கும் உள்ள வாசி
போராதோ தேவரீர்க்கும திருநாமத் துக்கும்"
(திருமாலை வியாக்யானம்)

என்றும் குறிப்பிடுகிறார் வியாக்யான சக்ரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளை.

அதாவது, "அணிகலமாக்கிய பொன்னை மிகச் சாதாரணமாக அனை வரும் எல்லா இடங்களிலும் எந்த நேரத்திலும் கையாளலாம்; அணிந்து அழகு பார்த்து அனுபவிக்கலாம். ஆனல், அதுபோலக்கட்டிப்பொன்னை கையாளவோ அணிந்து அழகு பார்த்து அனுபவிக்கவோ இயலாது. இக்கட்டிப் பொன்னைப் போல அவ்வளவாகப் பயன் படாதவன இறைவன். அணிகள மாக்கிய பொன்னைப்போல மிகச் சாதாரணமாகப் பயன்படுபவை அவ



திருப்புன்கூர் சிவன் கோயில்

னுடைய திருநாமங்கள்" என்று குறிப்பிடுகிறார் அவர்.

இப்படி, இறைவனுடைய திருநாமங்கள் மிகச் சாதாரணமாக மிக எளிதாகப் பயன்படுமாறுள்ள திறத்தை,

"அவன (இறைவன்) தூரஸ்தனானாலும் இது (திருநாமம்)
கிட்டி நின்று உதவும்" (—15)

என்று கூறுகிறது 'முமுட்சுப்படி' என்ற வைணவ நூல்.

இதற்கு ஆதாரமாக, மகாபாரதத்தில் வரும் ஒரு நிகழ்ச்சியைக் கூறுகிறது அந்நூல். அது வருமாறு;

"த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது
திருநாம மிறே" (—16)

துரியோதனின் பெரிய அவையில் பாஞ்சாலியை நிறுத்தி அவளின் துகிலைத் துச்சாதனன் உருவியபோது அவளைக் காத்தது இறைவனாகிய கண்ணபெருமானன்று. அவளைக் காத்தது அவள் கூவி அழைத்த அவ்விறைவனின் திருநாமமாகிய, 'கோவிந்தா! கோவிந்தா!' என்பதேயாகும்.

இப்படி இந்நிகழ்ச்சி, இறைவனுடைய திருநாமத்தின் பெருமையை, பயனை உலகம் அறிவதற்கான ஒரு வாய்ப்பானதை,

பொன்னிழை பட்டிழையும்—பல
புதுப்புதுப் புதுப்புதுப் புதுமைகளால்
சென்னியிற் கைகுவித்தாள்—அவள்
செவ்விய மேனியைச சார்ந்து நின்றே
முன்னிய ஹரிநாமம—தன்னில்
மூளுநற பயனுல கறிந்திடவே
துன்னிய துகிற்கூட்டம்—கண்டு
தொழும்பத் துச்சாதனன் வீழ்ந்து விட்டான்"

*(பாஞ்சாலி சபதம்—II—97)*

என்று எடுத்தியம்புகிறார் மகாகவி பாரதியார்.

இதுபோல இறைவனுடைய திருநாமம் எப்படிச் சாதாராணமாக நினைத்தமாத்திரததில் பயன்படுகின்றது என்பதை விளக்கும் நிகழ்ச்சி ஒன்றை பெரிய புராணத்திலும் காணலாம்.

பல்லவ மன்னன் திருநாவுக்கரசு சுவாமிகளைக் கல்லிய் கட்டிக் கடலிவிடும்படி உத்தரவிட்டான். அவ்வுத்தரவுப்படி கல்லில் கட்டப்பட்டுக் கடலிலிடப்பட்ட திருநாவுக்கரசர் இறைவனுடைய திருநாமமாகிய 'நமச்சிவாய' என்பதைப்பற்றிக் கொண்டு திருப்பதிகம் பாடக் கல் மிதந்தது. அக்கல்லைத் தெப்பமாகக்



கரூர் பசுபதீஸ்வரர்திருக்கோயில்

கொண்டு திருப்பாதிரிப்புலியூரில் கரை சேர்ந்தார் அவர். இதை,

"பெருகிய வனபினர் பிடித்த பெற்றி
யால்
அருமல ரோன்முத லமரர் வாழ்த்
துதற
கரியவஞ் செழுத்ததையு மரசு போற்
றிடக்
கருநெடுங் கடலினுட் கன்மிதந்ததே"
(பெரிய புராணம்–திருநாவுக்கரசு
நாயனர் புராணம்—127)

என்று தெய்வச சேக்கிழாரும்;

"செற்றுர் புரம்எரி செய்தலில் வீரன்
திருப்பெயரே
பற்று மறிபெண் திரைக் கடல் நீந்திய
பாவலனே"
(நால்வா நான்மணிமாலை—30)

என்று சிவப்பிரகாச சுவாமிகளும் குறிப்பிடுகின்றனர்.

கல்லில் கட்டிக கடலிலிடப்பட்ட போது இறைவனுடைய திருநாமத்தைச் சொல்லி அதன் மூலம் தான் உய்ந்து போனதைத் திருநாவுக்கரசு சுவாமிகளே பின்வருமாறு கூறுகிருர்.

"கல்லி னோடெனைப் பூட்டி அமண்
கையர்
ஒல்லை நீர்புக நூக்க என் வாக்கினுல்
நெல்லு நீள்வயல் நீலக் குடியரசஞ்
நல்ல நாமம நவிற்றி உய்ந்தேன்றே"
(தேவாரம், திருநீலக்குடிப்பதிகம்-7)

இறைவனின் திருநாமங்கள் எப்படி மிகவும் பயன்படுமாறுள்ளனஎன்பதை இதுவரை பார்த்தோம். அவற்றைக் கொண்டு என்னென்ன பயன்களைப் பெறலாம எனறினிப் பார்ப்போம்.

மார்க்கெட் (Market) எனற பகுதிகளுள் நுழைந்தால் ஒவவொரு கடையில் ஒவ்வொரு பொருளைத்தான பெறமுடியும். அனைத்துப்பொருள்களையும் ஒரே கூரையின கீழ் பெற முடியாது. ஆனுல் அப்படி எல்லாப் பொருள்களையும் ஒரே கூரையின் கீழ் பெற முடியும்! அந்த இடம்தான் சூப்பர் மார்க்கெட் (Super market) ஆகும்.

இந்த சூப்பர் மார்க்கெட்டைப் போன்றவைதான் இறைவனின் திருநாமங்கள். அவற்றைக் கொண்டு எதை வேண்டுமானுலும் பெறலாம். இதை,

"இத்திருநாமந்தான் ப்ரயோஜநாந்தர பரர்க்கு ப்ரயோஜநத்தைக் கொடுக்கும்; உபாயாந்தர நிஷ்டர்க்குப் பாவநமாயிருக்கும்; ப்ரபந்நர்க்கு தேஹயாத்ரா ஸேஷமாயிருக்கும். முத்துபபடும் துறையில் முழுகுவார் முத்தைக் கொடுத்துப் பழம் கொள்ளுவார்கள. செழு முத்து வெண்ணற் கெனச் சென்று மாறுவர்களிறே. விலையறியும் செட்டிகள் பக்கல் புகுந்தவாறே பெருவிலையனும்; செருக்கரானுர் இத்தைப் பூண்டு அநுபவிப்பார்கள்; அப்படியே ப்ரயோஜநாந்தர பரர்க்கும் உறுப்பாய், ஸாதநாந்தர நிஷ்டர்க்கும உறுப்பாய், ப்ரபந்நர்க்கு ஸ்வயம் ப்ரயோஜநமுமாயாய்த்து இத்திருநாமம் இருப்பது"—(திருமாலை 2ம் பாடல் வியாக்யானம்) என்று விளக்குகிருர் வியாக்யான சக்ரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளை.

அதாவது, "விலைமிகுந்த முத்தைக் கொடுத்து விலை குறைந்த வெண்ணெல், பழம் முதலியவற்றைப் பெறுவது போல திருநாமங்களைக் கொண்டு



ஸ்ரீ பிரகதீஸ்வரர் கோயில் - தஞ்சை.



ஸ்ரீ மீனாட்சி திருக்கோயில் - மதுரை.

அற்பமான மற்ற பயன்களையும் பெறலாம். அப்படியின்றி அம்முத்தை நல்ல விலைக்கு விற்பதைப் போலத் திருநாமங்களைக்கொண்டு வீடு பேற்றையும் பெறலாம். அதே முத்தை மாலையிலே கோத்து அணிந்தும் அனுபவிக்கலாம். அதுபோல திருநாமங்களைச் சுயம்ப்ரயோஜனமாகவும் அனுபவிக்கலாம்'' என்று விளக்குகிறார் அவர்.

இதுவரை சில கோணங்களிலிருந்து திருநாமங்களின் பெருமைகளைக் கண்டோம். இனி அத்திருநாமங்களை உச்சாடனம் செய்வதற்கென்று ஏதேனும் விதியோ தகுதியோ தேவையா? என்று ஆராய்வோம. அவ்வாய்வும் திருநாமங்களின் பெருமையை பறைசாற்றுவதாகவே விளங்கும்.

இறைவனுக்குத் திருநாமங்களைப் போலத் திருமந்திரங்களும் உண்டு. அத்திருமந்திரங்களைச் சொல்வதற்கென்று சில விதிமுறைகள் உள்ளன. ஆம்! கால நியமம், அதிகாரி நியமம முதலிய நியமங்களைக்கடைப்பிடித்தே மந்திரங்களை உச்சாடனம் செய்ய வேண்டும். ஆனால், திருநாமங்களைச் சொல்லும்போது அத்தகைய நியமங்கள் எதையும் கடைப்பிடிக்க வேண்டுவதில்லை.

இடறும்போது இடறினவன் 'அம்மா!' என்பான். அப்படி அவன் 'அம்மா!' என்பதற்கு ஏதேனும் நியமங்கள் உண்டா? இல்லை. அதுபோல இறைவனுடைய திருநாமங்களைச் சொல்வதற்கு நியமங்கள் ஏதும் இல்லை. இதை,

மந்த்ரம் எனனு தொழிந்தது:

> கால நியமமென்னு அதிகாரி நியமமெனன இவை தொடக்கமானவை
> வாராமைக்காக இடறினவன்' அம்மே!
> என்னுமபோது ஒரு சடங்கும்
> வேண்டாவிறே!''
>
> (திருமாலை வியாக்யானம், 1)

ஆனாலும், திருநாமங்களை உள்ளன்போடு உச்சாடனம் செய்ய வேண்டும் என்ற ஒரு விதியைமட்டும் கூறுவர். இதை,

> ''காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
> ஓதுவார் தம்மை நன்னெறிக்
> குய்ப்பது
> வேதம் நான்கினும் மெய்ப்பொரு
> ளாவது
> நாதம் நாமம் நமச்சிவாயவே''

என்பதாலும்,

> ''முருகன் குமரன் குகன் என்று
> மொழிந்து
> உருகும் செயல் தந்துணர் வென்
> றருள்வாய்''
>
> (அருணகிரிநாதர், கந்தரனுபூதி—15)

என்பதாலும் உணரலாம்,

இவ்விதியைப் பின்பற்றித் திருநாமங்களைச் சொல்லாவிட்டாலும் அவை இரட்சணமாகின்ற தம் செயலிலிருந்து தவறா. இதைத்தான்

> ''கொல்லும் கிரமம் ஒழியச் சொன்
> னாலும்
> தன் ஸ்வரூபம கெட நில்லாது''
> (—17)

என்று கூறுகிறது முமுட்சுப்படி.

தன்னைக் காக்க வேண்டிய தன் பிள்ளை அவ்வாறு செய்யாமல் தன்னை அலட்சியம் செய்தபோதும் தாயானவள் அவனை ஒதுக்காமல் அவனுக்கு நன்மைகளையே செய்வது போல சொல்லுகின்ற முறை தவறித்தம்மை உச்சரிப்பவர்க்கும் நன்மைகளையே நல்குபவை இறைவனின் திருநாமங்கள்.

இதற்கு அஜாமிளன் வரலாறு ஒரு தக்க சான்றாக விளங்குகிறது. அது வருமாறு :

அஜாமிளன் தன் வாழ்நாளின் தெய்வச்சிந்தனை சிறிதுமின்றிப் பலக் கொடுஞ் செயல்களைச் செய்து வந்தான். அத்தகைய அவனுக்கு இறுதிக் காலம் நெருங்கியது. எமதூதுவர்கள் அவனை நெருங்கினர். அச்சமயம் அவன் தன் கடைப்பிள்ளையின்பால் இருந்த பற்றினால் நாராயணன் என்னும் பெயருடைய அவனை 'நாராயணா!' என்று அழைத்தான். உடனே பரம்பொருளாகிய நாராயணனின் தூதுவர் வந்து சூழ்ந்தனர். அவனுடைய கொடுந்தன்மையை நோக்கி ஏற்கனவே அங்கு வந்திருந்த எமதூதுவர்களுக்கும் நாராயணனின் தூதுவர்களுக்கும் பலத்த வாதங்கள் நிகழ்ந்தன. இறுதியில் பகவானுடைய தூதுவரே அவன் ஆன்மாவைப் பற்றிச் சென்றனர் என்பது வரலாறு.

அஜாமிளன், சாகும் தருவாயில் இறைவனின் திருநாமத்தைச் சொல்ல வேண்டுமென்றோ, அதைச் சொல்வதால் தான்செய்த பாவங்கள் நீங்கித் தனக்கு வீடுபேறு வாய்க்கும் என்றோ கருதிச் சொல்லவில்லை. தன் பிள்ளையின பெயர் அதுவாக அமைந்துவிட்டதால அவன்மீதுள்ள பற்றினால் அதைச் சொல்லி அவனை அழைத்தான். எனவே இறைவன பெயரைச் சொல்லும் போது உள்ளன்போடு சொல்ல வேண்டும் என்ற விதிப்படி உச்சரிக்க வேண்டிய அவசியம் அவனுக்கு ஏற்படவில்லை. ஆனாலும் பிள்ளையை எப்படி அழைக்க வேண்டுமோ அப்படி அழைத்தான். அவன சொன்ன இறைவனின் திருநாமமானதினால் அது அவனைக் காத்தது.

இதேபோல, இறைவனின் திருநாமத்தை பரிகாசமாகவும்ஏளனமாகவும் அடிக்கடிக் கூறிக கொண்டிருந்த சிசுபாலன் போன்றவர்க்கும நற்கதி கிடைத்ததென்பதையும் இங்கே எணணிப் பார்க்க வேண்டும்.

இப்படி, இறைவனுடைய திருநாமங்களைச் சொன்னால்தான் பலனுண்டு என்பதில்லை; சொல்லக் கேட்டாலும் பலனுண்டாகும். இதற்கு முற்கலன் என்பவனுடைய வரலாற்றிலே சான்றுண்டு. அதைத் தொண்டரடிப்பொடியாழ்வார் ஒரு பாசுரத்தில் குடுப்பிட்டுள்ளார். அப்பாசுரம் வருமாறு :

"நமனும் முற்கலனும் பேச,
நரகில் நின்றார்கள் கேட்க,
நரகமே சுவர்க்க மாகும்
நாமங்கள் உடைய நம்பி,
அவனதூர் அரங்கம என்னாது
அயர்த்து வீழ்ந்தளிய மாந்தர்
கவலையுள் படுகின்றார்; என்று
அதனுக்கே கவல்கின் றேனே"
(திருமாலை—12)

முற்கலன் பாவமே செய்பவனாய் வாழ்ந்து வந்தான். ஒரு சமயம் அவன் தான் செய்த பாவத்துக்குப் பரிகாரமாக வெள்ளியாலான பசுவை தானம் செய்யும்போது 'கிருஷ்ணார்பணம்' என்று சொல்லிச் செய்தான். பின்னர் அவன் மரணமடைந்தபோது யமதூதர்கள் வந்து அவனைப் பாசக் கயிற்றால் கட்டி யமனிடம் இழுத்துச் சென்றனர். யமன் இவனை எதிர்கொண்டு அழைத்து உபசரித்தான். அப்போது முற்கலன் 'உன் தூதர்கள் என்னைக் கட்டியிழுத்து வர நீ என்னை உபசரிக்கிறாயே! இதற்குக் காரணமென்ன?' என்று யமனிடம் கேட்டான். யமனும், 'உன்னுடைய பெருமை அவர்களுக்குத் தெரியாது; உனக்கும் தெரியாது. நீ ஒரு முறை கிருஷ்ண நாமத்தைச் சொன்னதாலேயே நான் உனனை உபசரிக்கிறேன்' எனறு கூறினான். இப்படி இவர்கள் திருநாமத்தின் பெருமையைப் பேசிக் கொண்டிருந்தபோது அப்பேச்சு அங்கே நரகானுபவம் பண்ணிக் கொண்டிருப்பவர்கள காதில் சென்று விழுந்தது. திருநாமத்தைக் கேட்டமையினாலே அவர்களுக்கு நரகத் துன்பம் ஒழிந்து சுகம் உணடாயிற்று என்பது கதை.

யமன், 'கிருஷ்ணன்' என்ற தி[illegible] நாமத்தைத் தனக்கு நன்மை செய்யு[illegible] என்று கருதியோ; முற்கலனி[illegible] வேண்டுகோளுக்கிணங்கியோ; நர[illegible] வாசிகள் காதில் அது விழுந்து அவ[illegible]கள் உய்வு பெற வேண்டும் என்[illegible] நினைத்தோ சொல்லவில்லை. அதனை[illegible] கேட்டவர்களும், பாவம் செய்ததற்[illegible] வருந்தி அதற்குக் கழுவாயாக ஏதே[illegible]னும் செய்யக்கூடிய காலத்தில் கேட்[illegible]வில்லை; பாவத்தின் பலன்களை அனுபவித்துக் கொண்டிருக்கும்போது கேட்டனர். அப்படிக் கேட்டபோதும் விருப்பத்துடனா கேட்டனர்? இல்லை எதிர்பாராதவிதமாகவே அத்திரு நாமம் அவர்கள் காதில் விழுந்தது இப்படிப்பட்ட நிலையிலும் அத்திரு நாமம் நன்மை பயக்கும் தன்செயல் விருந்து மாறுபடவில்லை.

ஆக, இறைவனுடைய திருநாமங்களைச் சொல்லும்போது கடைப்பிடிக்க வேண்டிய விதிகள் ஒன்று ஏதுமில்லை என்பதையும்; காரணமின்றி உச்சரித்தாலும் அவை பலன் தரத் தக்கவை என்பதையும்; நாமே உச்சரிக்காது பிறர் சொல்லக்கேட்டாலும் போதும் அவை பலன் தரத்தக்கவை என்பதையும் காண்போம்.

இப்படி, இறைவனின் திருநாமங்கள் பயன் பயன்தரத்தக்கவையாக விளங்குவதால்தான் அவற்றைச் சொல்லிச் சொல்லி அதனால் வரும் பயன்களை அனைவரும் பெற வேண்டும் என்று முன்னோர்கள் கருதினர். அப்படிக் கருதியதோடு அவர்கள் தினமும் இறைவனின் திருநாமங்களை அனைவரும் சொல்ல வேண்டும் என்றும் வற்புறுத்தினர்.

ஒரு வேலையும் இன்றி சும்மா இருப்பவாகளால் கூட இறைவனின் திருநாமங்களைச் சதா சொல்ல முடியும் என்பது ஐயமே. இப்படியிருக்கையில, காலை முதல் மாலை வரை எந்திரம்போல் உழைக்கும் இன்றைய மனிதனுக்கு அச்சமயத்தில் இறைவனின் நினைப்புத்தான தோன்றுமா?

வனுடைய திருநாமங்களைத்தான் சொல்ல இயலுமா? என்று கேட்க லாம்.

இதற்கு, ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்ஸர் கீழ்க்கண்ட கதை மூலம் அருமையானதொரு விளக்கத்தை அளிக்கிறார்:

ஒரு சமயம் தேவரிஷியான நாரதர் தன்னைவிடவும் பக்தியில மிஞ்சியவர் கள் யாருமே கிடையாது என்று நினைத்து கர்வம் கொண்டார். எல் லாம் அறிந்தவராகிய பகவான், நார தருடைய மனப்போக்கை அறிந்து அவரைத் திருத்தி நல்வழிப்படுத்தத் திருவுள்ளம் கொண்டார். ஆகவே நாரதரிடம் அவர், 'நாரதரே! இன்ன இடத்தில் என்னுடைய பரம பக்தனாகிய ஒருவன் வாழ்ந்து வரு கிறான். அவனிடம் சென்று உறவாடி நட்பு கொள்ளுங்கள். அவனுடைய தொடர்பை வளர்த்துக் கொள்ளுங் கள்' என்று சொன்னார்.

பகவான சொன்னபடியே நாரதர் அந்த இடத்திற்குச் சென்றார். அங்கே ஒரு குடியானவன் இருப்பதைப் பார்த்தார். குடியானவன் அதிகாலை யில் படுக்கையைவிட்டு எழுந்திருக் கும் போது 'ஸ்ரீஹரி' என்று பகவா னுடைய பெயரை ஒரு முறை சொன் னான். பிறகு கலப்பையை எடுத்துக் கொண்டு வயலுக்குப் போய் நாள் முழுவதும் உழுதான். மாலை சாய்ந்த போது வீடு திரும்பினான். இரவு அவன் படுக்கைக்குப் போகும்போது மீண்டும் ஒரு முறை 'ஸ்ரீஹரி' என்று பகவானின் பெயரைச் சொன்னான்.

நாரதர் அவனுடைய வாழ்க் கையை ஒரு நாள் முழுதும் இருந்து கவனித்தார். பிறகு அவர், 'இந்தப் பட்டிக்காட்டான் எப்படி ஒரு பக்தி மானாக இருக்கமுடியும்? நாள் முழு வதும் அவன் தன்னுடைய உலககாரி யங்களையே கவனித்துக் கொண்டிருக் கிறான். பெரிய பகதிமான் என்பதற் குரிய எந்த அடையாளமும் இவ னிடம் காணப்படவில்லையே! இவனை எப்படி பக்தன் என்று சொல்ல முடி யும்?'' என்று தனக்குத்தானே நினைத் துக் கொண்டார்.

பிறகு நாரதர் பரந்தாமனிடம் திரும்பிச் சென்று, குடியானவனைப் பற்றிய தமது அபிப்பிராயத்தைச் சொன்னார்.

நாரதர் தமது கருத்தைச் சொன் னதும் பகவான் அவரிடம், 'நாரதரே! எண்ணெய் நிரம்பியுள்ள இந்தக் கிண்ணத்தை எடுத்துக் கொண்டு இந்தப் பட்டணத்தை ஒரு முறை சுற்றிவிட்டு வாருங்கள். ஆனால் ஒரே ஒரு துளி எண்ணெய்கூடக் கீழே சிந்தி விடாமல் ஜாக்கிரதையாக இருங்கள்' என்று சொல்லி நாரதரை அனுப்பி வைத்தார்.

நாரதர் பகவான் சொல்லியபடியே செய்து முடித்தார். 'நாரதரே! ஊரைச் சுற்றி வரும்போது தாங்கள் எத்தனை முறை என்னை நினைத்துக் கொண்டீர்கள்?' என்று பகவான் வினவினார்.

'பிரபோ, ஒரே ஒரு முறை கூட நினைக்கவில்லை. கிண்ணத்தில் இருந்த எண்ணெய் சிந்திவிடக்கூடாது என்ப தற்காக நான் கவனமாக இருக்கும் போது, எப்படி உங்களை நினைக்க முடியும்? அப்போது எனக்கு வேறு எந்த ஒரு ஞாபகமும் வரவில்லை' என்று நாரதர் பதில் சொன்னார்.

அதற்கும் பகவான், 'நல்லது, நார தரே, இந்த ஒரு கிண்ணத்தில் உங்கள் கவனம் பதிந்ததால், என்னை அடி யோடு முற்றிலும் மறந்துபோய்விட் டீர்கள். ஆனால் அந்தக் குடியான வனைப் பாரும். பாரமான குடும்பச் சுமையைத் தாங்கிக்கொண்டிருந் தாலும், தினந்தோறும் தவறாமல் இரண்டு முறை என்னை அவன் நினைக் கிறான்' என்று கூறி அருளினார்.

இக்கதையில், ஒருவன் அன்றாடம் தன்னுடைய கடமைச் சுமைகளுக் கிடையே இறைவனை நினைத்து அவ னுடைய திருநாமங்களைச் சொல்ல முடியவில்லையே என்று வருந்த வேண் டுவதில்லை! கடமைகளைச் செய்வதற்கு முனபும் செய்து முடித்த பின்பும் இறைவனை நினைத்து அவனுடைய திருநாமங்களைச் சொன்னால்கூட போதும் என்று அறிவுறுத்துகிறார் பரமஹம்சர்.

நாம் நம்மையும் அறியாமல் தின மும் இறைவனின் திருநாமங்களைச் சொல்வதற்கு வழியேதும் உண்டா? உண்டு.

நாம் தினமும பலரை அவர்க ளுடைய பெயரைச் சொல்லி அழைக் கிறோம். அப்படி அழைக்கப்படுபவர் களின பெயர்கள் இறைவனின் திரு நாமங்களாக அமைந்திருந்தால், அவர்களை அழைக்கும்போதெல்லாம் இறைவனின் திருநாமங்களை உச்சரித் தவர்களாகிவிடுவோம்.

இந்த அருமையான வாய்ப்பை அனைவரும் பெற வேண்டும் என்பதற் காகத்தான் பிள்ளைகளுக்குப் பெயர் சூட்டும்போது இறைவனின் திரு நாமங்களையே சூட்டுமாறு பெற் றோர்க்கு உபதேசிக்கிறார் பெரியாழ் வார்:

''மானிட சாதியில் தோன்றிற்றோர்
மானிட சாதியை
மானிட சாதியின பேரிட்டால்
மறுமைக் கில்லை
வானுடை 'மாதவா, கோவிந்தா'
எனறழைத் தக்கால்
நானுடை நாரணன
தமமன்னை நரகம்புகாள''

(பெரியாழ்வார் திருமொழி, 4, 6:4)

ஆக, பிள்ளையின பெயர் இறைவ னின் திருபபெயராக அமையும்போது அப்பிள்ளையை அழைககும் பெற்றோர், உடன் பிறநதோர், உறவினர், நண் பர்கள் முதலிய அனைவரும் இறைவ னின் திருநாமத்தை உச்சரித்தவர்க ளாகி அதற்குரிய பயனையும் பெறுவர்.



# இடையன் எறிந்த மரம்

திரு. வ. ஜோதி, எம்.ஏ.,
புதுப்பேட்டை.

ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் மிக அற்புதமான கருவூலங்களை நமக்கு வாரி வழங்கிய வண்ணம் உள்ளன. சுகர் முதலான மகிரிஷிகளும், முதலாழ்வார்களும் பரத்துவத்திலே ஊன்றி இருப்பார்கள். சநகர் முதலானோரும், திருமழிசைப்பிரானும் அந்தர்யாமியிடம் ஊன்றி இருப்பார்கள். வால்மீகி போன்ற மகரிஷிகளும், குலசேகரப்பெருமானும ஸ்ரீராமாவதாரத்திலே ஊனறி இருப்பார்கள்.

பராசரர், அவர் குமாரர் வியாசர் முதலான மகரிஷிகளும், நம்மாழ்வாரும், பெரியாழ்வாரும், ஆண்டாளும் கிருஷ்ணவதாரத்திலே ஊன்றி இருப்பார்களா. நாரதாதிகளும, தொண்டரடிப் பொடியாழ்வாரும், திருப்பாணழ்வாரும், திருவரங்கத்திலே ஊன்றி இருப்பார்கள்.

ஸ்ரீ சௌநக பகவானும், கடைசியாழ்வாரான திருமங்கையாழ்வாரும் அர்ச்சாவதாரத்திலே ஊன்றி இருப்பார்கள். நம்மாழ்வார் அருளிச் செய்த நாலு பிரபந்தங்களும நான்கு வேதங்களை ஒக்கும.

திருமங்கை ஆழ்வார் அருளிச் செய்த ஆறு பிரபந்தங்களும, அவ்வேதத்தின ஆறு அங்கங்களை ஒக்கும். மற்றை எண்மருடைய நன்மாலைகள் அவவேதததின உபாங்கங்களை (விரிவுரைகளை) ஒக்கும் எனறு ஆசார்யாகள கூறுவார்கள்.

இத்திருமங்கை ஆழ்வார் அருளிய பெரிய திருமொழி எதததனையோஅரிய செய்திகளை நமக்குத்தருகினறது. இத் திருமங்கை மன்னரின பதினோராம் பத்தில், எட்டாம திருமொழி அருமையும் பெருமையும் மிக்க பல பழமொழிகளைக் கையாளுகின்றது.

தேகசம்மநதத்தை அறுத்துத் தந்தருள வேண்டும் என்று ஆழ்வார் எம்பெருமானை பிரார்த்திக்கும் பகுதியாக இது அமைந்துள்ளது. இவ் வெட்டாம்பத்தின ஒவ்வொரு பாடலிலும் ஒரு அருமையான, நாட்டில் வழங்கும் பழமொழியைக் கையாள்கின்றார். அவரின் பிரார்த்தனைக்கு ஏற்ற வண்ணம் இப்பழமொழிகள் நயமுடன் கையாளப்பட்டிருப்பதைப்படிப்போர்கள் எண்ணும தோறும் இன்புறுவார்கள்.

உலக வாழ்வின் துன்பங்களை எடுத்தியம்பும் முகத்தான், 'ஆற்றங்கரை வாழ் மரம் போல் அஞ்சுகின்றேன', 'காற்றத் திடைப்பட்ட கலவர் மனம் மனம போல்', 'இருபாடு எரி கொள்ளியினுள் எறும்பே போல்'. 'வெள்ளத் திடைப்பட்ட நரியினம் போல', 'இடையின் எறிந்த மரம்' - என்றெல்லாம் பல பழமொழிகளைச் சுட்டிக் காட்டுகின்றார்.

இவ்வுலகானது துன்பம் நிறைந்தது. இவ்வுலக வாழ்வில் மனிதாகள் படும அவதியானது சொலலத் தரமன்று. அவர்கள் வாழ்வு இடையன் எறிந்த மரம் போன்று துனபத்தில் உளளது என்ற கருததினைச் சுட்டிக காட்டுகின்றார்.

''படைநிறை னபந்தாமரையோடு
அணிநீலம
மடைநின்று அலரும் வயலாலி
மணாளா
இடையன் எறிந்த மரமே ஒத்திராமே
அடைய அருளாய் எனக்கு
உன்றனருளே''
—பெரிய திருமொழி-11-8-6

''தாமரை மலர்களோடு, நீலமலர்களும் ஒன்றுசேர்நது மலர்ந்து மணம் வீசுகினற வயல்களையுடைய திருஆலித் திருநகரில் உள்ள எம்பெருமானே! இடையன் எறிந்த மரத்தினைப்போல் துன்பப்படாமல் தேகசம்மந்தத்தை அறுத்து உன்னுடைய திருவடிகளை அடைய, உன்னுடைய அருளால் அருளவேண்டும்' என்று வேண்டுகின்றார்.

தேகசம்மந்தத்தை அறுக்கவேண்டும் என்று விரும்புகின்ற திருமங்கை ஆழ்வார் அதற்கு கையாள்கின்ற பழமொழி ''இடையன் எறிந்த மரம்'' என்பது. அப்பழமொழி இங்கு எண்ணிப்பார்க்கத் தக்கது.

இப்பழமொழியில் அமைந்துள்ள ஆழ்ந்த கருத்தினை எண்ணிப்பார்த்தால் இடையன எறிந்த மரத்தை உதாரணமாக ஆழ்வார் காட்டியுள்ள பாஙகின் அருமையை நம்மால் உணர முடியும்.

இடையர்கள் ஆடுமாடுகட்கு உணவளிபபதற்காக மரத்தின் கிளைகளை வெட்டிச் சாய்ப்பார்கள். அவ்வாறு அவர்கள் மரக்கிளையை வெட்டும் பொழுது அதனை முழுமையாக வெட்டிச் சாய்க்க மாட்டார்களா. மரத்தின கிளையினை பாதிமட்டும் வெட்டுவார்கள். அவ்வாறு வெட்டும் பொழுது கிளையானது சிறிது சிறிதாக ஒடிந்து கீழே சாய்ந்து கொண்டே இருக்கும. ஆடுகளின் வாய்க்கு எட்டுகினற அளவிறகு அம்மரக்கிளை சாயந்தவுடன வெட்டுவதை நிறுத்தி விடுவாாகள்.

இசசமயததில் ஆடுகள் கூட்டமாகச சென்று அமமரத்தின் இலைகளைத் தின்னும். மரக்கிளையின் கீழ்ப்பகுதியில் உள்ள இலைகளைத் தின்று தீர்த்தவுடன் தன் முன்னிரண்டு கால்களை மடக்கித் தூக்கிக்கொண்டு பின் கால்களினால் நின்ற வண்ணம் எக்கிப் பாய்நது மீதம உள்ள இலைகளையும் உண்ணும்.

இப்படி அரைகுறையாக வெட்டிய வுடன் வெட்டிய மரக்கிளையை விட்டு விட்டு இடையர்கள் சென்று விடு வார்கள். மரக்கிளை முழுவதும் வெட்டிவிட்டால் அக்கிளை பினனர் பயன்படாமல் போய்விடும். எனவே கிளையை முழுமையாக துண்டிக்கா மல் விட்டுவிடுவார்கள. அம்மரக் கிளையானது பாதி ஒட்டித் தொங்கிய படி இருக்கும்.

அம்மரக் கிளையானது முழுவதும் வெட்டப்படாமல் பாதி ஒட்டியபடி இருப்பதால் அவவொட்டியபகுதியின் வழி மீண்டும் தழைப்பதற்கு ஏதுவா கும். மீண்டும் ஆடுகள் வந்து உண்ணுவதற்குவேண்டிய தழைகளைக் கொடுக்கும். இப்படி மாறி மாறி நடைபெறும்.

இம்மரக்கிளையின் நிலையோடு தம் நிலையை ஒப்பிட்டுப்பாடுகின்றார் ஆழ்வார். முழுவதும் காய்ந்து போகவும் வழியில்லை. மீண்டும் தளிர்த்தாலும் ஆடுகள் வந்து தழை யைத் தின்று விட்டுச் சென்று விடு கின்றன. எனவே அம்மரக்கிளை யானது அரைகுறையாக உயிர் வைத் துக்கொண்டிருக்கிறது.

எம்பெருமானே இம்மரக்கிளையின் நிலையோடு என்நிலையானது ஒத்துள் ளது. உயிரானது உன் நினைவில் வாடிக்கொண்டிருக்கிறது. தழைப் பதற்கும் வழியில்லை. மடிவதற்கும வழியில்லை. எனவே என்னுடைய பிறப்பினை அறுத்து உன்னை அடைய அருளவேண்டுமஎன்றுப் பாடுகின்றார்.

இது எத்தகைய சிறப்பான கருத்து என்பதை எண்ணிப் பார்க்க வேண் டும். இக்கருத்தினை ஆழ்வாாகளை அடியொற்றி பல நூல்களும பாடி இருக்கின்றன. பழமொழி நானூறு என்ற நூலில் இடையன் எறிந்த மரம் என்ற சொல் பயினறு வருகின் றது. இருப்பினும் வேறொரு பொரு ளில் கையாளப்படுவதைககாணலாம்.

"அடையப்பயின்றார்சொல் ஆறறுவராக்
கேட்டால்
உடையதொன்று இல்லாமை ஒட்டின்
படைபெற்று
அடைய அமர்ந்தகட் பைந்தொடி
அஃதான்
இடையன எறிந்த மரம்"
—பழமொழி-44

பெரிதும் நெருங்கிப் பழகியவர் கள் தமக்கென்று வேண்டுமென்று கூறும் சொற்களைக் கேட்டால், அப பொருள் தன்னிடத்து உடைய தொன்றாகவும், அதனைத் தாம் செய் பவராகவும் உறுதியாகக் கூறினால் அங்ஙனம வீணே கூறுவது இடைய னால் வெட்டப்பட்ட மரத்தினைப் போன்றதாகும்.

இடையன் கொஞ்ச கொஞ்சமாக தழையை ஒடித்தே மரத்தை அழித்து விடுகின்றான். அதுபோன்று இல்லா ததைத் தருவதாக வாக்களிப்பவனு டைய புகழும் கொஞ்சம் கொஞ்ச மாக குறைந்து போய்விடும் என் கிறது. தழை தினம் தினம் குறைவ தால் முடிவில் மரம் வீணாகி விடுவது போன்று அவன் புகழும் வீணாகிவிடும் என்ற அளவில் பழமொழி இக்கருத் தைக் கையாள்கிறது.

இருப்பினும் இடையன் பாதிமரக் கிளையைத்தான் வெட்டுவான் என்ற பெரிய திருமொழியின் பொருளே சரியானது என்ற கருத்தினைச் சொல் கின்றார் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள். தம்முடைய நினைவுமஞ்சரி என்ற நூலில் (பாகம் 1 பக்கம் 33) ஆழ்வாரின் கருத்தை அப்படியே கொள்வது சரியானது என்ற தம் எண் ணத்தைக் குறிப்பிட்டுக் காட்டுவார்.

ஆழ்வாரின் இச்சிறப்பான கருத தைத்திருத்தககதேவர் தாம்இயறறிய சிநதாமணி காவியத்திலும் அழகுற ஆண்டிருப்பதைக காணமுடிகினறது.

"கெடலருங் குரைய கொறறம் கெடப
பிறந்ததுவும் அன்றி
நடலையுள் அடிகள வைக நட்புடைய
வாகள ஐய
இடைமகன கொனற இன்ன
மரத்தினென தநததுன்பக்
கடலகத்து அழுந்த வேண்டா களைக
இக்கவலை எனறான்"
—சிந்தாமணி-1914

சீவகன் தன் தாயைப்பார்த்து தன் நிலையை இவ்வாறு சொல்கின்றான். 'என் தந்தை மரணமடையப் பிறந் தேன. அத்துடன் உயிருடன் இருந் தேனுயப் பகையை வென்றேனுமல் லேன. உயிரை நீத்தேனுமல்லேன். அன்றியும் நீ துன்பத்தில தங்கவும் நட்புடையவர்கள் மனம் வருந்தவும் இடைமகன் கொன்ற இன்ன மரம் போல் இருந்தேன்' என்கிறான். இப்பாடலின் கருத்தும் ஆழ்வாரின் கருத்தையே ஒத்துள்ளது.

இதே கருத்தினை வெள்ளையராசேந் திரன் துகில் விடுதூது என்ற நூலி லும் 'வல்லிடையன் சாய்த்த மர மானேன் -(கண்ணி 199)' என்ற சொற்றொடர் ஆளப்பட்டு இதே கருத்தைப் புலப்படுத்துவதைக்காண முடிகின்றது.

'இடையன் வெட்டு அரைவெட்டு' என்று நாட்டில் வழங்கும் பழமொழி கள இவ்வுயர்ந்த கருத்தினை உடைய வையே. இப்பழமொழியின் கருத்தை சிந்தித்து உணருவோமா னால் இவ்வுவமையின விளக்கம் நன்கு விளங்கும். இலக்கியங்களில் இடை யர்களைப் பற்றி வர்ணிக்கின்ற இடங் களில் 'ஒடியெறிதல்' என்ற தொடர் வரும் 'ஒடிய எறிதல்' என்பதே விகாரப்பட்டு 'ஒடியெறிதல்' எனறு வந்தது. இடையர்கள் ஒடிய எறி வார்களே அன்றி அற்று விடும்படி எறிய மாட்டார்கள் என்ற கருத்தை விளக்கவே இச்சொற்றொடர் ஆளப் பட்டு வந்ததை உணரலாம். கம்ப ராமாயணத்தில்

"துடியெறி நெறிகளும் துறையும்
சுறறுற
ஒடியெறி அம்பிகள் யாவும் ஒட்டலிர"
—(கம்ப-அயோ-1010)

என்று வருகினற வரிகள் இக்கருத் தினை மெய்ப்பிககும்.

எனவே ஆழ்வார் அருளிய அறபுத மான கருவூலமான 'இடையன்எறிந்த மரம்' என்ற கருத்தை பழமொழி, சிநதாமணி, வெள்ளைய ராசேந்திரன் துகில் விடுதூது போன்ற நூல்கள அப்படியே கையாணடுள்ளதைக் காண முடிகின்றது. இதிலிருந்து ஆழ்வாாகள் எதையும நுணுகிஆயும் பாங்குடையவர்கள் என்பதை உணர முடிகின்றது.

# சிறப்புமிக்க திருத்தலங்கள்

திரு. ஆர். எஸ். சுப்ரமணியம்
குடியாத்தம்.

1. நரமுக கணபதி உளள திருத் தலம் சிதமபரம (தெற்கு வீதி)

2. ஒரு முகமும் ஆறு கரங்களும் உள்ள முருகன் தலம் கோடிக் காட்டில் (வேதாரண்யம் அருகில்)

3. முயலகனுக்குப் பதிலாக பாம பின் கீழ் நடராஜன் நடனமாடும் தலம் திருப்பாச்சிலா கிராமம் (திரு வாசி என்றும் கூறுவர்)

4. சதுர்புஜ ராமன் (மூலவர்) உள்ள தலம பொன்பதர் கூடம்

5. சதுர்புஜ ராமன் (உற்சவர்) உள்ள தலம் புள்ளம்பூதங்குடி

6. இரு கரங்களுடன் மகா விஷ்ணு காட்சியளிக்கும் தலம் நாச்சி யார் கோயில் (இத்தலத்தில் உள்ள மற்றொரு சிறப்பு தாயாருக்கு முதல் வழிபாடு)

7. சிவஸ்தலத்தில் விஷ்ணு ஸ்தல மும் இணைந்த தலங்கள் அ) சிதம்பரம் நடராஜர் ஆலயம் ஆ) காஞ்சிபுரம் ஏகாம்பரேஸவரர் ஆலயம் இ) காஞ்சி காமாட்சி ஆலயம்.

விளக்கம் : அ) சிதம்பரத்தில் கோவிந்தராஜர் ஆ) காஞ்சியில் நிலாததிங்கள் துண்டத்தான் இ)ஆதி வராஹப் பெருமாள்

8. விஷ்ணு ஸ்தலத்தில் சிவஸ் தலம் இணைந்த ஸ்தலம் அ) திருக் கண்டியூர் ஆ) உத்தமர் கோயில். இவ்விரு விஷ்ணு தலங்களிலும் பிஷா டனர் உள்ளார்.

9. வலக்கையில் சங்கமும் இடக் கையில் சக் ரமுமாக மஹா விஷ்ணு காட்சி தரும் ஸ்தலம திருக்கோயி லூர் (தெ. ஆ. மா.)

10. தலையின் கீழ் மரக்காலும் இடக்கையில் ஓலை எழுத்தாணியுடன் பள்ளி கொண்ட பெருமாள் ஸ்தலம் திரு ஆதனூர்

11. பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரும் இணைந்துள்ள ஸ்தலம் சுசீந் தரம்.

12. காஞ்சிபுரம அஷ்டபுய கரத் தில மஹாவிஷ்ணு எட்டு திருக்கரங் களுடன் காட்சி தருகிறார்.

13. கருடாழ்வார் கைகளில் சங்க மும் சக்கரமும் உளள ஸ்தலம் திரு வெள்ளியஙகுடி.

14. பள்ளி கொண்ட பெருமாள் சதுர்புஜங்களுடன் காட்சி தரும ஸ்த லம் 1. திருத தெற்றியம்பலம் 2. திரு இந்தளூர்

15. மூலவர் இல்லாமல் உத்சவர் மட்டும் உள்ள விஷ்ணு ஸ்தலம் காஞ் சியில் உள்ள திருநீரகம்.

16. இடமிருந்து வலமாக இல்லா மல் வலமிருநது இடமாக விஷ்ணு பள்ளி கொண்ட திருத்தலம் காஞ்சி புரம் திருவெஃகா.

17. திருவள்ளூர் வீரராகவ பெருமாள் வலது கையை சா ஹோத்ர முனிவர் மீதும் இட கையில் ஞான முத்திரையோடு உ ளார்.

18. உத்தமர் கோயில் என் திருத்தலத்தில் (விஷ்ணு தலம்) சிவ பிரம்மா, பார்வதி, சரஸ்வதி மற் தெய்வங்களுக்கும் சன்னதி உள்ளது

19. நந்தி தவம் செய்து சா விமோசனம் பெற்ற விஷ்ணு ஸ்தல நந்திபுரம் என்ற நாதன் கோயி (இத்தலத்தில் உள்ள மற்றொரு சிறப்பு; சிபிச் சக்கரவர்த்திக்கா கிழக்கே இருந்த பெருமாள் மேற் முகமாக ஆனா)

20. புஜங்க சயனத்திலே (பள்ளி கொண்ட பெருமாள்) மிக சிறிய திருஉருவம் கொண்ட இட திருச்சிறுபுலியூர். மிகப்பெரிய தி உருவம் கொணட இடம் திருக்கண மங்கை.



மலைமீது பழனித் திருக்கோயில்,

21. தை அமாவாசைக்கு மறு நாள் 11 கருடசேவை நடக்கும் ஸ்தலம் சீர்காழியை அடுத்த திருநாங்கூர்

22. திருசசேறை என்ற திருத் தலத்தில் தைப்பூசத்தன்று பெருமாள் ஸ்ரீதேவி, பூதேவி, நீலாதேவி, மஹாலக்ஷ்மி, சாரநாயகி என்ற ஐந்து தாயாருடன் காட்சி கொடுககிறார்.

23. கருடாழ்வார மிகப்பெரிய திருஉருவில் அமைந்த ஸ்தலம் ஸ்ரீரங்கம்.

24. கேரளாவில் உள்ள திருவல்லா என்ற விஷ்ணு தலததில் சுதாசன சக்கரம ஸ்தாபிக்கப்பட்டுள்ளது. இத்தலத்தில் பெண்கள் சன்னதிககு வெளியே நின்று சேவிக்கிறார்கள்.

25. பெருமாளை சிரசு, உடல், திருவடி இவற்றை மூன்று வாசல் வழியாக சேவிக்கவேண்டியுள்ள ஸ்தலங்கள் 1. திருவனந்தபுரம் 2. திருவாட்டாறு (இரணடும் கேரளா)

26. விஷ்ணு சுதைவடிவில் காட்சி தரும் ஸ்தலங்கள் : 1. திருக்குறுங்குடி நம்பி சன்னதி 2. ஸ்ரீவில்லிபுத்தூர் வடபத்ரசாயி 3. திருக்கூடல் (மதுரை) கூடலழகர் 4. திருத்தண்கால் நின்ற நாராயணப் பெருமாள்.

27. பெருங்குளம் எனற தலத்தில் கருடனும் உத்சவராகப் பெருமாள் பக்கத்தில காட்சி தருகிறார்.

28. மகாபலிபுரம் என்ற தலத்தில் ஆதிஷேசன் இல்லாமல் தரையிலேயே காட்சி தரும் பெருமாள் ஸ்தல சயனப்பெருமாள்.

29. நைமிசாரணயம் என்ற தலத்தில் ஆலயமும், மூர்த்திகளும் இல்லாமல் பகவான் ஆரண்ய ஸ்வரூபியாக ஸ்ரீ விஷ்ணு இருப்பதாக நம்பி காட்டையே வணங்குகின்றனர்.

30. நவநரசிமமரை தரிசிக்கக் கூடிய தலம் அஹோபிலம் (ஆ.பி.)

31. எவ்வளவு பானகம் ஊற்றினாலும் குறிப்பிட்ட அளவு மீதமாகும் உள்ள பானக நரசிம்மர் ஸதலம் மங்களகிரி (ஆ.பி.)

32. ஆஞ்சனேயருக்கு சதுர் புஜங்கள உள்ள ஸ்தலம் சோளிஙகபுரம் (வ.ஆ.மா.). இவருக்கென்று தனி மலே உள்ளது மற்றொரு சிறப்பு.

33. பக்தர்களுடன பஜனை செய்யும் பாவத்தில் ஸ்ரீ விஷ்ணு இரண்டு கைகளுடன் காட்சி தரும் ஸ்தலம் பண்டரீபுரம்.

34. ஸ்ரீ முஷ்ணம் என்ற ஸதலத்தில் தாயாருககு சப்த கன்னிகைகள் தோழிகளாக உள்ளனர்.

35. பூரி ஜகந்நாதம் என்ற தலத்தில ஸ்ரீவிஷ்ணு வ்ருக்ஷ வடிவமாக எழுந்தருளியுள்ளார்.

36. பிரம்மாவுக்கு தனிக்கோயில் உள்ள ஸ்தலம் புஷ்கரம (அஜ்மீர் அருகில்)

37. சரஸ்வதிக்கு தனிக்கோயில் உள்ள இடங்கள் 1. சித்பூர் (மாத்ருகயா) 2. கூத்தனூர் (மாயவரம)

38. பதினெட்டு அடி அனுமான் உள்ள திருத்தலங்கள் 1. சுசீந்தரம் 2. நாமக்கல் 3. கந்தாஸ்ரமம் (சேலம்) 4. இராமேஸ்வரம் 5. பந்தூரா (சேலம் ஜில்லா) இவற்றில் சேலம் அருகில் உளள கந்தாஸ்ரமத்திலும பநதூரிலும பஞசமுக ஆஞசநேயராக உள்ளார். இராமேஸ்வரத்தில் மார்புக்கு கீழே பூமியில் மறைநது உளளார்.

39. நில உலகில் பார்க்க வேண்டிய விஷ்ணு தலஙகள 106. நில உலகில பாாக்க இயலாதவை 1. திருப்பாற்கடல 2. திருப்பரமபதம் (ஸ்ரீவைகுண்டம)

40. புளிய மரத்தில் அமர்ந்த படியே நமமாழ்வார் மற்ற திவ்ய தேசங்களை மங்களாசாசனம் செய்தவர். மற்ற ஆழ்வார்கள நேரில் மங்களாசாசனம் செய்தனர். இவர் ஒருவர் மட்டும் இதற்கு விதி விலககு.

41. பெருமாள் வலது திருவடியில் விண்ணை அளந்த ஸ்தலம் திருக்கோவிலூர் இடது திருவடியில் விண்ணை அளந்த ஸ்தலம் சீர்காழி.

42. சுவாமிமலே எனனும் முருகன் ஆலயததில் தமிழ் ஆண்டுகள் அறுபதுக்கும் அறுபது படிக்கட்டுகள் உள்ளன.

43. ஆதிசேஷன் குடை பிடிக்க பெருமாள் நின்ற திருக்கோலம உள்ள தலம் தலம் ஸ்ரீவைகுணடம்.

44. பெருமாளின பாதங்களை மட்டும் ஜன்னல் வழியாக பார்க்கும் திருத்தலம திருப்புளிங்குடி.

45. திருக்கணணபுரம் திருத்தலத்தில் பெருமாளுக்கு அபய ஹஸதத்துக்கு பதிலாக வரத ஹஸ்தம விளங்குகிறது. பிரயோக சக்கரம சேவை இங்கு விசேஷம்.

46. திருக்கண்ண மங்கை திருத்தலத்தில் இன்றும் தேவர்கள் தேன் கூடு வடிவததில பூஜை செய்வதைக் காணலாம்.

47. காஞ்சியில் அத்தி மரத்தாலான அத்தி வரதர் நாற்பது ஆண்டுகளுக்கு ஒரு முறை திருக்குளததிலிருந்து எடுக்கப்பட்டு பூஜை நடக்கின்றது.

48. ஸ்ரீகிருஷ்ணர் குடும்ப சமேதராய் காட்சியளிப்பது திருவல்லிக் கேணியில். தவிர இவருக்கு மற்ற தலங்களைப் போல் அல்லாமல் பெரிய மீசையும் உண்டு.

49. அஷ்டாங்க விமானம் உள்ள தலஙகள: 1. காஞசியில் வைகுண்டப பெருமாள கோயில் 2. மதுரையில் கூடலழகர் கோயில் 3. மதுரை அருகே திருககோஷ்டியூர் கோயில்

50. குடைவரைக்கோயில உள்ள விஷ்ணு தலஙகள் : 1. திருமெய்யம் சத்யகிரிநாதர் ஆலயம் 2. நாமக்கல் நரசிம்மர் ஆலயம. இதுபோல திருப்பரங்குன்றம் முருகன் ஆலயம், பிள்ளையார்பட்டி கணபதி ஆலயம்.



# நகைச் சுவையில் பக்திப் பாடல்கள்

பக்திப் பாடல்களை மெய்ம்மறந்து மனமுருகிப் பாடிய புலவர்கள பலர். ஆனுல் பக்திப் பாடலகளை ஒனபது சுவைகளில் சிறந்த சுவையான நகைச் சுவையில் பாடிப் பக்தர்களைச் சிரிப் பிலாழ்த்திய புலவர்களும் சிலர் உள்ளனர். செந்தமிழ் மொழியில தனிப்பாடல் திரட்டு எனற நூல் தொகுப்பு ஒனறு உள்ளது. இத் தொகுப்பில் பல்வேறு புலவர்கள் பாடிய பாடல்களைத் திரட்டித் தொகுததுள்ளனர். இத்தனிப்பாடல் திரட்டில் உள்ள பாடல்கள்யாவும் வேடிக்கையாகவும், சுவையாகவும், அறிவுக்கு விருந்தாகவும் அமைந் துள்ளன. இப்பாடல்களைத் திரட்டித் தொகுப்பித்த பெருமை கி.பி. 19-ம் நூற்றுண்டில் வாழ்ந்த சந்திரசேகர கவிராச பண்டிதரைச் சாரும்.

இத்தனிப் பாடல் திரட்டில் கவி காளமேகம் என்ற புலவர் பாடிய பல நகைச்சுவைப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இவர் இயற் பெயர் வரதன் என்றும் கும்பகோணத்தரு கில் உள்ள நந்தி என்ற கிராமத்தில் பிறந்தவர் என்றும் கூறுவர். மேக மானது சரளமாக மழையைப்பொழி வதைப் போலப் பாடல்களைச் சரள மாகப் பாடியதால் காளமேகம் எனப் புலவர் பலரால் சிறப்பிக்கப்பட்டார். இனிகவிகாளமேகம பாடிய சில நகைச் சுவைப் பக்திப் பாடல்களைக் காண் போம்.

பக்திப் பாடல்கள :

கவி காளமேகப் புலவா சிவபெரு மானைக் குறித்துப் பாடிய பக்திப் பாடலில் நகைச்சுவையைக் கலந்து கொடுத்திருக்கும் பாடலாவது ;

காலனையுங் காமனையுங் காட்டுசிறுத்
தொண்டர்தரு
பாலனையுங் கொன்ற பழிபோமோ—
சீலமுடன்
நாட்டிலே வீற்றிருந்த நாதரே நீர்—
திருச்செங்
காட்டிலே வீற்றிருந்தக் கால.

திருச்செங்காடு என்ற ஊரிலே அர்த்தநாரீஸ்வரராகச்சிவபெருமான் கோயில் கொண்டுள்ளார். எனவே கவி காளமேகம், 'திருச்செங்காட்டில் கோயில் கொண்டுள்ள சிவபெரு மானே! நீர் நீதிதேவனைப்போல நாட்டில் நடித்துக கொண்டிருந்தீர். நீர் இன்று இநத செங்காட்டிலே வந்து நுழைந்து கொணடது ஏன்? முனபொரு காலத்தில் எமனைக் கொன்றீர். காமனையும் கொன்றீர். பினனர் சிறுத்தொணட நாயனுரின் மகனையும் கொன்று பழியை மேற் கொண்டீர். அதனுல் பயந்து இத் திருச்செங்காட்டிலே வந்துவிட் டாயா?' என்று நகைச்சுவையோடு கேட்கிறுர். செய்த தவறுக்காக எமனையும், காமனையும் கொன்ற சிவ பெருமான் அவர்களை மீண்டும் உயிர்ப் பித்தது புராண வரலாருகும். சிறுத் தொண்டநாயனுரின் பக்திச் சிறப்பை உலகுக்கு அறிவிக்கத் தன் ஒரே மகனைக் கொன்று அக்கறியைச் சமைத்து உண்ண வேண்டிய சிவபெரு மான் அவவாறு சிறுத்தொண்டர் செய்த பின்னர் அவரது மகனை மீணடும் உயிர்ப்பிழைக்கச்செய்ததும் பெரிய புராணமென்ற நூலால் அறி வதாகும். இக்கருத்துக்களடங்கிய வற்றையே காளமேகம் சிரிப்பூட்டும் வகையில நமககுப் பாடியளித் துள்ளார்.

சிதம்பரத்தில் கோயில் கொண் டுள்ள நடராஜப் பெருமானை பிச்சாண் டவர் வேடமிட்டு ஊர்வலமாக எடுத்துச் செல்வர். அக்காட்சியைக் கணட காளமேகப் புலவர் சிரிப்பூட் டும வகையில் ஒரு பாடலைப் பாடி யுள்ளார். அப்பாடலாவது :

நச்சரவம பூண்டதில்லை நாதரே !
தேவரீர்
பிச்சையெடுத்துணணப் புறப்பட்டும்—
உச்சிதமாம்
தாளமேன் குஞ்சரமேன் கார்க்கடல
போனறேன் முழங்கும்
மேளமேன் ராஜாங்கமேன் ?

'விஷமுடைய நாகப்பாம்பைக்கூட அணிந்திராத சிவபெருமானே! சிதம் பரத்தில் நடனமாடிய நாதரே! இதென்ன பிச்சைக்கார வேடம். இப் படி ஊர்வலம் வருவது கேவலமென்று உனக்குத் தெரியவில்லையா! நீர் பிச்சையெடுத்து உணவுண்ணப் புறப் பட்டுவிட்ட பிறகு யானை உமக்கு முன்னே செல்ல ஊதுகொம்பு ஒலிக்க கரிய கடல் போன்ற மேள, தாளங்கள் முழங்க இராஜாமாதிரி மக்கள் கூட் டத்தில் செல்வது ஏன்' என நகைச் சுவை தரும்படிப் பாடுகிறுர்.

முருகப் பெருமானைக் கண்டதும் காளமேகப் புலவருக்கு ஒரு நகைச் சுவைப் பாடல் நினைவுக்கு வருகிறது. அப்பாடலாவது :

அப்ப னிரந்துண்ணி யாததாள மலை
நீலி
ஒப்பரிய மாமனுறிதிருடி—சப்பைக்
கால்
அணணன் பெருவயிற றுறுமுகத்
தானுக்கிங்
கெண்ணும் பெருமை இவை.

புலவா M. தியாகவலலி, M.A.B.Ed.,
வேலூர்.

இவ்வெண்பாப் பாடலில் ஆறுமுகப் பெருமானைக் கேலி செய்வதுபோல் பாடியிருக்கிறுர். 'ஆறுமுகனே! உன் முன்னேர்களின் வரலாற்றைப் படிக் கும்போதுசிரிப்புதான்வருகிறது. உன் னைப் பெற்றெடுத்த சிவபெருமானே

# விண்ணப்பம்

'ஸப்தகிரி' மாத இதழுக்கான தொகையை 'மணியார்டர்' மூலமாக அனுப்புதல் பயனுள்ளதாக அமையும். மணியார்டர் கூப்பனில் தங்கள் முகவரியினை ஆங்கிலத்தில் எழுதுவதும், பழைய சந்தாதாரராக இருந்தால் தங்கள் சரியான சந்தா எண்ணை மறக்காமல் குறிப்பதுவும் 'ஸப்தகிரி' நிருவாகப்பணியினை எளிதாக அமைக்கும். தொகை அனுப்பியும் இதழ் பெறுதவர்கள், தாங்கள் எழுதும் புகார்க்கடிதத்தில் மணியார்டர் எண்,செய்த தொகை, அனுப்பிய தேதி ஆகிய விவரங்களுடன் தங்கள் முழு முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொண்டால் விரைவில் செயலாற்ற உதவும். சந்தாதாரர்களின் முழு ஒத்துழைப்பையும் எதிர்பார்க்கிறோம்.

— ஆசிரியர்.

பிச்சையெடுத்து வயிறு வளர்ப்பவா. உன் தாய் பார்வதியோ மலையரசன் பெற்றெடுத்த மகள். உன மாமன திருமாலோ இடையர்கள் வீட்டில் புகுந்து உறிகளில் வெண்ணெய் திருடி வளர்ந்தவர். உன் அண்ணன் கணபதியோ சப்பைக்காலும், பெருவயிறும் உடையவர். இவையாவும் உனக்குப் பெருமையாக அமைந்தவையாகும்' எனப் படிப்போர்கருச் சிரிப்பூட்டும் வகையில் பாடிய திறம் போறறத்தக்கதல்லவா ?

மேலும் காஞ்சிபுரத்தில் வரதராஜப்பெருமாள்கோயிலில் வைகாசித் திருவிழா ஆண்டுதோறும் நடைபெற்றுவரும் சிறப்பானதொரு திருவிழாவாகும். இத்திருவிழாவில் கருடசேவையின்போது வரதராஜப் பெருமானை அலங்கரித்துக் கருடனின் மேல் அமர்த்தி நகாவலம் வருவது வழக்கம் இவ்விழாவைக்காண இலட்சோப இலட்சம மககள் காஞ்சிபுரததிற்கு வந்து பெருமாளைச் சேவித்து அருள்பெறுவர். இதையே காளமேகப் புலவர் சிரிப்பூட்டும் வகையில் பாடியிருப்பதாவது:

பெருமாளு நல்ல பெருமா ளவர்தம்
திருநாளு நல்ல திருநாள—பெருமாள்
இருந்திடத்திற சும்மா யிராமை
யினுலேயோ
பருந்தெடுத்துப் போகிறதே பார்.

'காஞ்சிபுரத்தில் கோயில் கொண்டுள்ள இவ்வரதராஜப் பெருமாள் நல்ல பெருமாள்தான். அவருக்காக நடைபெறுகின்ற இக்கருடசேவைத் திருவிழாவும் பெரியதொரு விழா தான்' இந்தப் பெருமாள் இருக்கின்ற இடத்திலே சும்மா இருக்க முடியாததால் அவரைப் பருந்து தூக்கிக் கொண்டு பறக்கிறது பார் !' என்று நகைச்சுவை ததும்ப பாடியுள்ள நயம் போற்றுதற்குரிய தொனறுரும்.

**பதினுறு வகைச் செலவங்கள்**

ஒரு மனிதன் நல் வாழ்வு வாழப் பதினுறு வகைச் செல்வங்கள் அவனுக்கு அவசியம் தேவை. அப்பதினுறு வகைச் செல்வங்களையும் அடககிக காளமேகப் புலவர் பாடிய சிறநததொரு பாடலைக் காண்போம்.

துதிவாணிவீரம் விசையன் சந்தானந்
துணிவுதன
மதி தானியஞ் சௌபாக்கியம போகம
அறிவழகு
புதிதாம பெருமை அறங்குல நோவகல்
பூணவயது
பதினுறு பேறுந் தருவாய் மதுரைப்
பராபரனே !

இப்பாடல் கருத்தாவது: மதுரையில் கோயில கொண்டுள்ள சொக்கநாதப் பெருமனே எனக்குத் துதி—புகழையும், வாணி—கலைக்குரிய கல்வியையும, வீரம்—ஆறறல் அல்லது நெஞ்சுரத்தையும், விசையம்—சிறப்பு வாய்ந்த வெற்றியையும், சந்தானம்—மக்கட்பேற்றையும், துணிவு—தைரியத்தையும், தனம்—பணச்செல்வத்தையும், மதிதானியம்—நம்மால் போற்றிக் காக்கப்படும் நெல் முதலிய தானியங்களையும், சௌபாககியம்—நோயற்ற வாழ்வு அலலது சுகமும், போகம்—அனுபவித்த அனுபவமும், அறிவு—கற்றறிந்ததினுல பெற்ற அறிவும், அழகு—பிறரைக் கவரத்தக்க வடிவமும், பெருமை — நற்செயல்களால் கிடைக்கும பெருமையும், அறங்குலம—ஒழுக்கச் சிந்தனையுடைய குடிப்பிறப்பும், நோவகல் — நோயில்லாத வாழ்வும், பூண்வயது—நீண்ட காலம் உயிா வாழ்வதற்கேற்ப ஒழுக்கமுடைய வாழ்வும் தருவீராக!' ஆக பதினுறு செல்வங்களையும் உணடாக்கிப் பாடிய கவி காளமேகத்தின் திறத்தை வியந்து பாராட்டாமல் இருக்க முடியுமா ? பெரியோர்கள் சிறியோர்களை வாழ்த்தும்போதும் பதினுறும் பெற்று வாழ்க! என்று ஆசீர்வாதம் செய்வது மேற் கூறப் பட்ட பதினுறு செல்வங்களையும் பெறறு நீ வாழ்வாயாக ! என்று தான் பொருளாகும்.

இவ்வாருகக் காளமேகப் புலவர் பாடிய பாடல்கள் பல உள்ளன. இவர் ஒரே பாடலில் இரு பொருள் படும்படி பாடியவை சிலேடைப் பாடல்கள என வழஙகப்படுகின்றன. நகைச்சுவையில் பக்திப் பாடல்களைப் பாடிய காளமேகப் புலவரின் திறமையை நாமும் படித்துப் பாராட்டலாமல்லவா ! ✱



(16-ம் பக்கத் தொடர்ச்சி)

திருமலை சென்று பெருமாளை சேவித்து விட்டு வந்த நண்பர் ஒருவர் மற்றொருவரிடம் தாம் திருமலையில் பெற்ற அனுபவங்களைக் கூறுகிறார் என்று கொள்வோம். கேட்பவரிடத்து, அவரே நேரடியாகச் சென்று அனுபவிக்கும் வரையில், அவை கேள்வி ஞானமாக, சுருதியாகத் தானே இருக்கும்.

மருத்துவம், பௌதிகம், மொழியியல், ஒலியியல் போன்ற இன்னோரன்ன துறைகளில் உறுதியான நிரூபணங்களின் மேலும், அனுபவத்தின் மேலும் நாம் விஷயங்களைத் தீர்மானிககிறோம்; பிரமாணங்களாக எடுத்துக் கொள்கிறோம். அனுபவ வெளிப்பாடுகளான வேதங்கள் ஆப்தப் பிரமாணம். ஏனெனில் உலக நன்மையைக் கருத்தில் கொண்ட ஆப்தர்களாகிய ஆன்றோர்கள் யாவரும் வேதங்களையே அறுதிப் பிரமாணமாகக் கொள்கின்றனர்.

மந்த்ர ஆயுர்வேத ப்ராமாண்யவச்ச தத்
பராமாண்யம ஆப்த ப்ராமாண்யம் ||

கடவுளின் இருப்பை ஏற்காத ஸாங்கிய மதம் கூட வேதங்களே அறுதிப் பிரமாணம் என்று கூறும். 'சரியான, உண்மையான ஞானத்தை, மற்றொன்றைச சாராமல் தன் சொந்த சகதியினாலேயே வெளிப்படுவதால் இந்த சுருதி ப்ராமாண்யம் ஸ்வத ப்ராமாண்யமாகும்.' தமக்குத் தாமே பிரமாணம். இவற்றிற்கு மற்றொரு பிரமாணம் கிடையாது.

நிஜ சகத்யபிவ்யக்தே : ஸவத :
ப்ராமாண்யம

கனவற்ற உறக்கத்தில் ஆழ்ந்திருக்கும் மனிதன் குறட்டை விடுகிறானே, இது அவன் இசைந்து செய்யும் செயலா? இவனறியாமலேயே, இவன் கட்டுப்பாடுகளை மீறி வெளிவருகிறது. அது போன்று தன்னை யறிந்து, தன்னிலே ஆழ்ந்து, தன்னை யிழந்து பிரம்ம ஞானத்தில் திளைத்திருக்கும் ஞானியினிடத்து அவன் கட்டுப்பாட்டையும் மீறி எழும் அனுபவங்களின் ஆனந்த வெளிபபாடுகள் ஆதலால், மனித நிலை, தேவ நிலை போன்ற எல்லா உயர்நிலைகளையும் கடந்த மோனப் பெரு வெளியில் எழும் கானங்கள் ஆதலால் வேதஙகள் சுருதிப் பிரமாணம். ஆப்தப் பிரமாணம், ஸ்வதப் பிரமாணம்.

சுருதியும் ஸ்மிருதியும் :

சுருதி என்று சொல்லப்படும் வேதத்திற்கு 'தர்மம்' என்றும் ஒரு பெயர் உண்டு. தர்மம் என்றால் என்ன? எது தாங்குகிறதோ, எது உலகனைத்தையும் ஒருசேர இணைத்துப் பிடிப்பில் வைத்திருக்கிறதோ, அதுவே தர்மம்.

தாரணாத் தர்மமித்யாஹு: தர்மோ
தாரயதி பரஜா: ||

வாழ்வியல் தத்துவமே தர்மம். வாழ்வை நெறிப்படுத்துவதும், வளப்படுத்துவதும் தர்மம். எனவே வேதம் தர்மம். தர்மமே வேதம் ' ஸ்மிருதி ' என்றால் தர்ம சாஸ்திரம்.

தர்மத்தை ரிஷபம் என்னும் காளையாக உருவகப்படுத்துவார்கள். தர்மத்தின் தலைவனை, ஒவ்வொரு உயிரினுள்ளும் நீக்கமற நிறைந்திருககும் க்ஷேத்ரஞ்ஞன் எனும் இறைவனை 'ரிஷப வாகனன்' என்று சொல்வதும் இக்கருத்தின் அடிப்படையில்தான.

ரிஷபத்திற்கு நான்கு பாதங்கள் உண்டு. அது போன்றே வேத தர்மத்திற்கும் நான்கு பாதங்கள் உண்டு. ஞானம, தியானம், சமம், தமம் இவையே நான்கு பாதங்கள். ஆன்மாவை யறிதலே, அதாவது தன்னை யறிதலே ஞானம் எனப்படும். இடைவிடாத ஆனம சிந்தனையே தியானம். மனதை ஒரு முகப்படுததி சம நிலைப்படுத்தலே சமம. புலனடக்கம் தமம்.

வேதங்கள் கூறும் தர்மம் இவை நான்குதான். வேறு எதனைப் பறறியும் வேதங்கள் பேசவேயில்லை.

குரு முகமாகக் கேட்ட மெய்ஞான அனுபவங்களை பயிற்சியின் மூலம் சீடனும் எவ்வாறு பெறலாம் என் பதை விளக்கும செய்முறை வழி காட்டிகளே ஸ்மிருதிகள் சுருதி தர்மம். ஸ்மிருதி தர்ம சாஸ்திரம்.

ச்ருதிஸ்து தர்மோ விஞேயோ தர்ம
சாஸதிரஸது வை ஸமிருதி :

"முறையினுன் ஸ்மார்த்த மென்று மொழிவதம மார்க்கஞசேர்நத துறைகள் வைதீகமாம் மேலாச் சொல் வதிச் சுத்த மார்க்கம்."

வேதம்-சொற்பொருள

வேதம என்ற சொல பகுபதம். இதில் உள்ள 'வே' என்ற முதலெழுத்து உ, அ, ஈ என்ற மூன்று அக்ஷரங்களால் ஆனது உயிரெழுத்துக்களின் புணர்ச்சி, இவ்வுயிரே மெய்யெழுத்துகளுககு உயிர் கொடுக்கிறது, ஒலி கொடுக்கிறது. எனவே 'வே' எனும் எழுத்து வேதத்தின் மந்திர பாகத்தைக் குறிக்கிறது என லாம.

'தம்' எனும் எழுத்து தானம் அல்லது ஈகை என்ற பொருளைத் தரும் 'தா' எனற தாதுவிலிருந்து எழுந்தது. வேதம் ஓதுவித்தல் ஈகை. இது பயன்படும் யகஞம் முதலிய கர்மங்கள ஈகை. எனவே 'தம்' என்ற சொல் வேதத்தின் பிராம்மண பாகத்தைக் குறிககிறது எனலாம்.

மந்த்ர ப்ராஹ்மணோ உபயாதமக:
சப்தராசி: வேத: |

இவ்வாறு வேதம் என்ற சொல் மநத்ரம், பிராம்மணம் என்ற இரு பகுதிகளையும் சொல்லா நிற்கிறது.

மேலும் வேதம் என்ற சொல்லே நானகு வேதஙகளையும் குறிக்கும். உ-அ-ஈ-தம் இவை சேர்ந்து வேதம் எனறாயிற்று. இவை வ-ஈ-தம் எனறு புணாவதாகக கொள்வோம 'வ' என்பதால சொல்லப்படும் வாககின், ஈ என்பதால் சொல்லப்படும் அழகை, 'தம்' அறிவுறுத்துதல் என்று பொருள் வரும். அதாவது வாக்கின் அழகை வெளிப்படுத்துதல் வேதம் என்றாகிறது.

அடி, தளை, எதுகை, மோனை, சப்தம், ராகம் போன்ற அம்சங்களைக் கொள்ளும் போதே வாக்கு முழுமை

பெறுகிறது, அழகு பெறுகிறது. இவை அனைத்தும ஒருங்கிணைந்த பாக்கள் எல்லா வேதங்களிலும் இருநதாலும் ரிக்வேதம் செவிக்கும் மனதிற்கும் இதமளிககும் இனிய பாசுரங்களையே அதிகமாகக் கொணடுள்ளதால் வேதம் என்ற சொல் ரிக் வேதத்தைக் குறிக கிறது எனலாம்.

வேதம் என்ற சொல்லை வ-இ-தம் எனவும பிரிககலாம். வ-என்ருல் அமுதம், நீர். இ-என்ருல் இசசை. தம்-எனருல் அறுத்தல் எனறு பொருள். எனவே வேதம் என்ற சொல் நீரை உணவாகக் கொணடு வாழும் செடி கொடிகளை அறுத்தல் என்ற வினையைக் குறிப்பதாகக் கொள்ளலாம். யஜுர் வேதம் 'இஷெத்வா...ஏ! புர சங்கொம்பே உன்னை வெட்டுகிறேன்' என்று துவங்குகிறது. இதனைக் குறிப்பாகக் கொணடு வேதம் என்ற சொல் யஜுர் வேதத்தைக் குறிக்கிறது எனலாம்.

வ-இ-தம என்று பிரிக்கும் போது, 'வ' என்ற அக்ஷரத்திற்கு அமுதம் என்பதால பெறப்படும் ஸோம ரசத்தையும் இ-காரத்திற்கு லக்ஷ்மியையும், 'தம்' என்பதற்கு தனத்தை அளித்தல் என்றும் பொருள் கொண்டால், ஸோம ரசத்தை ஸோமத்தில் ஆஹுதியாகச் செய்யும் கர்மத்தைக் கூறும் ஸாம வேதத்தை 'வேதம்' என்ற சொல் குறிக்கிறது எனலாம்

இது போன்றே வ-வலியை உடையவனுக்கு, இ-லக்ஷ்மியாகிய வெற்றியை, தம்-தருவது என்றும் பொருள் கூறலாம். அதாவது பகைவரை வெல்வதற்குரிய உபாயங்களைக்கூறும் அதர்வண வேதத்தை 'வேதம்' என்ற சொல் கூறுகிறது எனலாம்.

அறம், பொருள, இன்பம், வீடு இந்நானகையும் அளிப்பது வேதம். வேதம் என்ற சொல்லே இதனைச் சொலலும். இச்சொல்லை வ-ஈ-இ-தம என்றும் பிரிககலாம். வ-என்பது அமுதம் எனபதால் அமர வாழ்வளிக்கும் அமுதமான தர்மத்தைக் குறிக்கிறது. ஈ-திருமகளை, செல்வத்தைக் குறிக்கும். இச்சையின் மூலம் பெறப்படும் இன்பத்தைக் குறிக்கும். வீடுபடுதல் என்று பொருள் தரும். 'தம்'-வீடு பேற்றைக் குறிக்கும். இவ்வாறு வேதம் என்ற சொல் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கையும் குறிககிறது எனலாம்.

# பிறவிப் பயன் 

"அரிதினும் அரிது காண மானுடராய்
பிறத்தல்"
"இப்பிறவி தப்பினுல் எப்பிறவி
கிட்டுமோ"

என மனிதப் பிறவியின உயரிய அரிய வாய்ப்பை எடுத்துக காட்ட எழுந்துள்ள பல பாடல்களையும எடுத்துக் காட்டுகளையும பல்வேறு கொள்கைகளையுடைய பல பெரியார்களின் கூற்றுக்களிலிருநது அறியலாம்.

பால் வேற்றுமையிலும், தாய் அன்பிலும், உணர்ச்சி வசப்படுவதிலும, இனப்பற்றுதலிலும, பிணி, மூப்பு இத்தன்மைகளிலும், விலங்கினங்கள், ஊர்வன, பறப்பன போன்ற ஏனைய பிறவிகளுடன மானுடப் பிறவியையும் ஒப்பிட்டால் வேறுபாடு காண முடியாது. அம்மட்டோ! நாய் மனிதனைவிட செய்நன்றி யறிதலிலும், எஜமான விசுவாசத்திலும், சொன்னதைச் சொல்வதில் கிளிப்பிள்ளையும், பிறர் செய்வதைப் பினபற்றுவதில் தனக்கு நிகர் தான என்ற நிலையில் குரங்கும் மேன்மை பெற்றுள்ளன. எனினும் மனிதன் உயர்நதவனுகக் கருதப்படுகிருன் எனில் அவனது ஆராய்ந்தறியும் பகுத்தறிவுத் தலைமைதான் அதற்குக் காரணமாகும.

எங்ஙனம் ஐநது விரலும ஒனறு போலில்லையோ அதைப போன்றே மனிதனின் ஆராய்ச்சியும் அவனது சூழ்நிலை, பணபாடு இவைகளைப் பொறுத்து மாறுபட்டிருககின்றன. பாட்டுக்கொரு புலவன பாரதியார் கூற்று போல,

"தேடிச் சோறுநிதம் தினறு; பல
சின்னஞ்
சிறு கதைகள் பேசி
வாடித துன்பம மிக உழனறு வாழும்
வேடிக்கை மனிதர்"

தான் இவர்கள். ஆனுல வாழ்வில் விலங்கினம். விஞ்ஞான யுகமாகிய இன்று, மனிதன் வானவெளியில் சஞ்சரித்து சந்திரனிலும், சூரியனிலும் வாழ வழி வகுக்கினருன். ஆண்டவன் கொடுத்தது அறிவு, அதைக் கொணடு அவனுடைய சிருஷ்டியிலேயே அறபுதம் நிகழச் செய்ய அவா மிகக் கொள்கிருன. ஆனுல் ஓரளவுக்குத் தான் மனிதனுல் செய்ய இயலுகிறது. எனவே மனித அறிவு ஓர் எல்லைககுட்பட்டது. அதைக் கொணடு அதறகு அப்பாறபட்ட அதி அறபுதங்கள் செய்துவிட்டோம் என இறுமாந்திருக்கும் மனிதனுக்கு அந்த நிலைக்கு தன்னை ஆட்டி வைக்கும் சக்தியைச் சிந்தியாது இருக்கும் நிலையில் எவ்வாறு பிறவிப் பயனை அடைய இயலும்.

பிறவிப் பயனை அடைய வேணடிய மனிதனுக்கு வாழ்க்கையில் பல பருவங்கள் உண்டு. பிரம்மச்சரியம், கிரஹஸ்த நிலை, சந்நியாசம ஆகியவை அவற்றுள் முக்கியமானவை. பிரம்மச்சரியத்தில் மனிதன் தன்னைப் பற்றியும் தன் அறிவைப் பற்றியும் பெருமையும் இறுமாப்பும் அடைகிருன். தனக்கு நிகர் தானேதான என்றும் எண்ணுகின்ருன. பிறா அறிவுரைகளைக் கேட்கும் பொறுமை கூட அவனிடம் ஏறபடுவதில்லை. கிரஹஸ்தன் என்ற நிலையில் இல்வாழ்க்கையில் அடியெடுத்து வைககும் பொழுது தன்னுடைய எண்ணங்களிலும் சுக துக்கங்களிலும் தம்பதிகள் ஒருவருக்கு ஒருவர் இடங்கொடுத்து வாழ்கின்றனர். குழந்தைகளைக் கண்டதும தங்களையறியாமல் தங்களது சுக துக்கங்களை விட்டுக் கொடுத்து அவர்களது நல்வாழ்வில் நாட்டம் செலுத்துகின்றனா. அவர்கள் நலத்தில் நாட்டம் செலுத்தும் இந்த நிலையினையேதான் இன்று வாழ்வின் பூரணத்துவத்தை இரணடறக் கலக்கும பொழுதும் திருஞான சம்பந்தப் பெருமான்,

"காதலாகிக கசிந்து கண்ணீர் மலகி
ஓதுவார் தமமை நனனெறிக்குய்பபது
வேதம் நானகினும் மெய்ப் பொரு
ளாவது
நாதன நாமம் நமசிவாயவே"

---

**திருமதி. கே. தேவகி பிரகாசம்**
*திருப்பதி.*

---

என்று பாடிப் பரவசமடைகின்ருர். இத்தகைய சைவப் பெருமக்களைப் போன்றே நாராயண எனற நாமத்தை போற்றிப் புகழ்நது வீட்டு நெறியினை அடைந்தனர் ஆழ்வார்கள். திருமங்கை ஆழ்வார்,

"நலநதருஞ் சொலலை நான் கண்டு
கொண்டேன்
நாராயணவெனும் நாமம்"

என்று பாடுகினருர்.

**நாவினுக்கு அருங்கலம :**

காது, மூககு, கை, கால் போன்ற உறுப்புகளுக்கு பின்னும் அணிகலன்கள் அணிவித்து அழகு பெறச் செய்கின்ருேம். ஆனுல் நாவினுக்கு அணிகலன்களை நாம அணிவதில்லை. நமது நாவுககரசர் பெருமான் நாவினுக கருங்கலம நமச்சிவாயவே என்று நாவினுக்கும அணிகலன் உண்டு என்பதை நவின்றுள்ளாா.

**கசிந்த அனபு வேண்டும் :**

நாம வழிபாட்டை எளிய வழியில் நாம் மேற்கொண்டு இறைவனது திருவடியாகிய பேரின்ப நிலையினை அடையலாம். இறைவனது திருவடியை

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம (ஸதோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன) | 0—50 |
| 2. | ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாகடர். பொன். சௌரிராஜன் டாக்டா. கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாகடா. பொன் சௌரிராஜன | 0—50 |
| 5. | இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன | 1—50 |
| 6. | நித்யாநுஸந்தானம (வடகலை) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. | சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. | கண்ணன் பேசுகிறான் —நஜன | 0—50 |
| 10. | சுவாமி பட்டினத்தாா டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |
| 11. | முக்கவி கணட காப்பியம — டாக்டர். டி. ஜி. அனந்த சுப்ரமண்யம் | 12—00 |

## சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. | அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. | கடோபநிஷத —டாகடர். கே. சி. வரதாசாரியாா —டாகடர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம டாக்டர். டி. ஆர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாங்க்யானம் —திரு. ஆா. ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூல மாக நூல்கள் அனுப்புதல இயலாது. நூல்களுக்கு மக்கள் தொடர்பு அலுவலர், நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி'' எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

அடைவதற்கு உடலை வருத்தினாலும் மனம் கசிந்த உள்ளன்பும் வேண்டும். கசிந்த உள்ளன்பு இல்லாவிட்டால் இறைவனது திருவடிப்பேற்றை அடையமுடியாது. இதனைத்திருமூலர்,

'' எனபே விறகா இறைச்சி அறுத்திட்டு
பொன்போல் கனலில பொரிய
வறுப்பினும
அன்போடுருகி அகம குழைவார்கன்றி
என்போல மணியினை எயத
வொண்ணாதே''

என்று அருளியுள்ளார்.

**காந்தியடிகளின் வெற்றியின் ரகசியம்:**

ஆன்றோர்கள் வகுத்துக் கொடுத்த திருநாமத்தின் பெருமையினை உணர்நது அதனை வாழ்க்கையில் கடைப்பிடித்தவர் இந்நூற்றாண்டில் வாழ்ந்த காநதியடிகளேயாவா. எல்லோரையும் போல சாதாரணமாகப் பிறந்த காந்தி சத்தியத்தையும் அஹிம்சையையும் கடைப்பிடித்து இவற்றிற்கு அடிப்படையாகவுள்ள திருநாம வழிபாட்டையும் கடைப் பிடித்ததால் மகாத்மா காந்தியானார். பல அரசியல் பிரச்சனைகளுக்கும் தீர்வு காண இராம நாமமே தமக்குத்துணை புரிந்ததாக மகாத்மா கூறுகின்றார். இடையறாது இந்நாமத்தை அவர் கூறி வந்ததால்தான் எதிர்பாராத வகையில் உயிர்ப்பிரியும் போதும்கூட ''ராம்ராம்'' என்று அவரால் சொல்ல முடிநதது. காந்தியடிகளின் வாழ்க்கை நமக்கு வழிகாட்டியாக விளங்குகின்றது. நம் கண் முன் வாழ்நது காட்டிய காநதியடிகளின் வாழ்க்கையினையும் தேவாரம், திருவாசகம், திருமந்திரம் தந்த ஆன்றோர்களின அருள் வாக்குகளையும உணாந்து திருநாமத்தினை இடையறாது கூறி இறைவனது திருவருளைப பெறுவோமாக.

'' ஒன்று கண்டீா உலகுக்கு ஒரு
தெய்வம்
ஒனறு கணடீர் உலகுக்கு உயிராவது
நன்று கண்டீர் நமச்சிவாய பழம
தின்று கணடார்கு இது தித்தித்த
வாறே''
—திருமூலர்.

நம் அன்னைத் தமிழகம் ஒரு புண்ணிய பூமி. வரலாற்றைப் புரட்டினால் அநேக ஞானிகளும் எண்ணற்ற சித்தர் பெருமக்களும் இங்கு அவதரித்து வாழ்ந்திருந்ததாகக் காணலாம். மக்களின் மனதைப்பண்படுத்த எண்ணற்ற இலக்கியங்களைப் படைத்தும், அறிவுரைகளைப் பகன்றும் இச்சான்றோர் செய்திருக்கும் அருட்பணி நம்மை வியப்புக் கடலில் ஆழ்த்துகிறது. பொருள் பொதிந்த இப் பெரியோர்களின் படைப்புக்கள் தமிழரின் பண்பாட்டைப் பெரிதும் பண்படுத்தியிருக்கிறது ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கும் அருட்பாடல்களைத் தமிழுக்கீந்த பெரியோர்களுள் சிவவாக்கியரும் ஒருவராவர்.

பிறக்கும் பொழுதே சிவசிவ என்ற திருநாமத்தைச் செப்பிக் கொண்டே பிறந்ததால் இவருக்கு இப்பெயர் வந்ததென வரலாறு கூறும். அருளமுத மழைபோல அருட்பாடல்கள் பலவற்றை இவர் பாடியிருக்கிறார். உள்ளமும் உடலும் பயனுற இவரது பாடல்களைப் போல் மருந்தாவது பிறிதொன்றில்லையென அறிஞர் உலகம் போற்றுமளவுக்கு இவரது பாடல்கள் புகழ் பெற்றவை. பாடல்கள் மூலம் அரிய கருத்துக்களை எடுத்துரைத்துத் தமிழகத்திற்கு இவர் செய்திருக்கும் தொண்டு அளப்பரிது. பாசிபிடித்துக் கிடந்த மக்கள் மனத்தில் பகுத்தறிவுப் பேரொளியை ஏற்றிய பெருமை இவரையே சாரும். இவரது பாடல்களைப் படிக்கும் பொழுது இவர் நாத்திகரோ என எண்ணத் தோன்றுமெனினும் பாடல்களைப் படிப்போர் சிவானந்த வெள்ளத்தில் திளைப்பர் என்பது திண்ணம்.

# சிவவாக்கியர்

நீர்மேல் எழுத்துப் போன்றது இந்த மானிட வாழ்க்கை. சிறுமதி படைத்த மனிதன் தான் தேடிய செல்வத்தைப் பூதம் காக்கும் புதையலைப் போல காத்து வைக்கின்றான். மக்களென்றும் மனைவியென்றும் செல்வம் சேர்த்து வைக்கின்றான். அப்படிப்பட்ட மனிதன் ஒரு நாள் இறந்து போகிறான். உடனே மக்கள் சுற்றம், மனைவி எல்லோரும் அவன் மேல் விறகை அடுக்கிச் சுட்டு, பின்னர் நீரில் மூழ்கி நினைப்பொழிந்தனர் தேடிய செல்வமும் மனையும் அவனுடன் செல்கிறதா? இதனை விளக்கும் பாடல் வருமாறு :

மிக்க செல்வ நீபடைத்த விறகுமேவிப் பரவிகான
விறகுடன கொளுத்துமேனி வெநது போவதறிகிலீர்
மககள்பெண்டிர் சுற்றமென்னுமாயை காணுமிவையெலாம்
மறலிவந் தழைத்தபோது வந்துகூட லாகுமோ

இறைவனைக் காணவேண்டுமென்ற விருப்பத்தால் சிலர் அங்குமிங்கும் செல்கின்றனர். உடம்பினுள் குடிகொண்டிருக்கும் உத்தமனைக் காண முடியாமல் கோயில் கோயிலாகச் சென்றும் குளங்குளமாக மூழ்கியும் இறைவனைக் காணமல் தவிக்கின்றனர். இறைவனைக் காணும் எளிய வழியை சிவவாக்கியர் கூறியபடிக் காண்போம்.

வேணும்வேணு மென்றுநீர் வீணுழன்று தேடுவீர்
வேணுமென்று தேடினலு முனன தல்ல தில்லையே
வேணுமென்று தேடுகின்ற வேட்கையைத் துறந்தபின
வேணுமெனற வப்பொருள விரைந்து காணலாகுமே

காணவேண்டுமென்ற ஆசையைத் துறத்தலே கடவுளைக்காண எளியவழி. 'ஆசை அறுமின்கள்! ஆசை அறுமின்கள்! ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்!' என்ற பாடற் கருத்து இதனுடன் ஒத்திருப்பது நோக்கற்குரியது.

'அலகில் கலையின் பொருட்கெல்லை ஆடுங்கழலே' இதனையறியாதார் அநேக சாத்திரங்களையும் வேத வேதாந்தங்களைப் பயின்றும் பக்குவமில்லா மனத்தினராய் தம்மை வியந்து தருக்கித் திரிகின்றனர். கற்றது கைம்மண்ணளவு கல்லாதது உலகளவு என்ற உண்மையை மறக்கின்றனர். எல்லாம் அறிந்தவர் எம்மைப் போல் யாருளர் என இறுமாந்த நெஞ்சினராய் உலவுகின்றனர். இவர்களைப் பார்த்து எள்ளி நகையாடுபவர் போல் ஒரு பாடலைச் சிவவாக்கியர் பாடியுள்ளார்.

நட்டதா வரங்களும நவின்ற சாத்திரங்களும
இட்டமான ஓமகுண்ட மிசைத்தநாலு வேதமும்
கட்டிவைதத மததகம கடுமபிதறறி தற்கெலாம்
பெட்டதாய் முடிந்ததே பிரானையா னறியவே

**திரு. கி. அரங்கசாமி, எம்.ஏ.,**
*பட்டாம்பி*

எதனையறிய வேண்டுமோ அதனையறியாமல் வேறெதையோ பயின்று வீண்காலம் கழிப்போரை எவ்வளவு நயமாகச் சாடுகிறது இப்பாடல்!

உள்ளத்துள் உறைந்துள்ள ஒளியைக் காணமல் கோவில்கள் தோறும் சென்று மந்திரங்களை உபசரித்து மயங்குகின்றோர் ஏராளம். இறைவனைக் காணும் மனப்பக்குவ ஞானம் இன்மையே இதற்குக் காரணம். இதனை உணர்ந்து கொண்டால் அவனை நமமுளே நாமே கண்டு மகிழலாம்.

கோயில்பளளி யேதடா குறித்துநின்ற தேதடா
வாயினல தொழுதுநின்ற மந்திரங் களேதடா
ஞானமான பளளியில் நன்மையாய் வணஙகினல்
காயமான பளளியில் காணலாகு மிறையையே

# ஸ்ரீ நாராயண நாமத்தின் ஏற்றம்

நாராயணன என்னும் சொல்லுக்கு நாரஙகளுககு அயனமாய் இருப்பவன என்று பொருள்படும. சித-(அறிவுளள உயிர்கள்) அசித-(அறிவறற பொருட்கள) யாவும் நாரஙகள் எனப்படும். இவையா வற்றிலும் அயனமால் (ஆதாரமால்) இருப்பவன் நாராயணன் ஒரு வனே! இவற்றைத் தனக்கு ஆதாரமாய் கொண்டிருப்பவனும நாராயணனே! மற்ற எந்த தெய்வங்களுக்கும அந்தப் பெருமை கிடையாது.

ஸ்ரீ நாராயணன் எனற பெயர்க்கு ஜலஸவருபமாக இருப்பவன் என்றும், அழிவற்றவனெனறும, பிறப்பு, இறப்பு இலலாத ஆதியநதமில் லாத முழு முதற பெருஙகடவுள் என்றும் வேதங்களும், ஸ்மருதிகளும் கூறுகின்றன. பிறப்பு, இறப்பு இல்லாத பெருமான் பல அவதாரங்களி லும பிறக்கவிலலேயா? எனறால் பகவான எவராலும் பிறப்பிக்கப்பட வில்லை எனறும் தன் இசசையாலே தானே பிறக்கும் பிறப்பு, இறப்பு இல் லாத பெருமான என்பதையும் கீதையில்,

அஜோSபி ஸன்னவ்யயாதமா பூதானுமீசவரோSபி ஸன் |
பரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம் யாத்ம மாயயா ||

என்று ஸ்ரீகிருஷ்ணர் திருவாய மலர்நதருளினார்.

இறைவன் என்னும் சொலலுககு எல்லா இடங்களிலும் எல்லாப் பொருட்களிலும் தங்கியும் தாங்கியும் நிறைந்திருப்பவன் என்றும், கடவுள் என்னும் சொல்லுக்கு எல்லாவற்றையும் கடந்து இருப்பவன், எல்லாவற றையும் இயக்குபவன் எனறு பொருள்படுவதுபோல் "நாராயணன்" என் னும சொல்லுக்கு உலகில் உள்ள எல்லாப் பொருட்களிலும் அந்தர்யாமி யாய் இருப்பவன் என்றும் பொருள்படும். எனவே இறைவன், கடவுள் என்னும் சொறகள் நாராயணனுக்கே பொருநதும். சகல கலயாண குணங் களுக்கும் உறைவிடமாய் இருப்பவனும் நாராயணனே. இதை ஸ்ரீ பொய் கையாழ்வார்,

"முதலாவார் மூவரே. அம்மூவருளளும்
முதலாவான் மூரிநீர் வண்ணன்" என்று கூறுகிறார்.

மும்மூர்த்திகளுள் முதலவனாய் மறற எல்லா தேவதைகளும் போறறி வணங்குவதறகுரிய முழு முதற் பெருங்கடவுளாய் இருப்பவன் நாராயணன ஒருவனே. எனவே ஆழ்ந்த ஞான, பகதி வைராக்ய குண சம்பந்தர்களாகிய ஆழ்வார்கள் அபபரமபொருளின் அவதார விசேஷங் களையும் கல்யாண குணங்களையும் பாடி ஆனநதம் அடைநதார்கள்.

நாமும் ஸ்ரீமந நாராயணனின் புகழைப்பாடி அவன திருவருள் பெறுவோமாக.

திரு. எஸ. கோவிந்தராஜன்-மதுரை-625001.

உலகிலுள்ள மந்திரங்களிலெல் லாம் தலையாயது ஐநதெழுத்து மந திரமே. பல்வேறு மந்திரங்களை வருந்திக் கறபோர் வாணாள் வீணாவ தனறிப் பயனொன்றும் கணடிலர். அத்தகையோர்ககு உணமையை உணர்த்தும் பொருட்டாய்ச் சிவ வாக்கியர் ஒரு பாடலைப் பாடியுள் ளார்.

மநதிரங்கள கற்றுநீர் மயங்குகின்ற
மாந்தரே
மந்திரஙகள கறறுநீர் மரித்தபோது
சொலவீரோ
மந்திரங்க ளும்முளே மதித்தநீறு
மும்முனே
மந்திரங்க ளாவது மனத்திலைந்
தெழுததுமே

பஞ்சாட்சர மந்திரத்தை ஓதுவ தால உண்டாகும் பலனகளை மற் றொரு பாடலில் எடுத்துக் கூறுகிறார். அம்மநதிரத்தை உச்சரிப்போர் மானிடராயினு தேவராவர்; இந்திர பதவியையும் அடைவர். பெருஞ் செல்வராவர். இன்னும் எத்த னையோ நற்பேறுகளை அடைவர்.

சிவாயமஞ் செழுததிலே தெளிந்து
தேவராகலாம
சிவாயமஞ் செழுத்திலே தெளிந்து
வான மாளலாம்
சிவாயமஞ் செழுத்திலே தெளிந்து
கொண்ட வான்பொருள
சிவாயமஞ் செழுத்திலே தெளிந்து
கொளளு முண்மையே

இஙஙனம் உயிருக்கு உறுதி பயக் கும் அனேக ததது‌வங்களின் பெட்ட கமாகச் சிவவாக்கியர் பாடல்கள் திகழவதைக காணலாம. பாலினும் தேனினும் பன்மடங்கு இனிய அவ ரது பாடலகளைப படித்து இனபுறு வோமாக!



# பிரதோஷ காலமும் வரலாறும்

ஆலய வழிபாடு முறைகளில் பிரதோஷ காலம் என்ற வழிபாடு உண்டு. ஒவ்வொரு தமிழ் மாதங்களிலும் இரண்டு தடவை பிரதோஷ காலம் வரும். அவை சுக்கில பக்ஷம், கிருஷ்ண பக்ஷம் என்ற இரண்டு பக்ஷங்களிலும் வருகின்ற திரயோதசி திதியிலே சூரியாஸ்தமனத்துக்குமுன் மூன்றே முக்கால் நாழிகையும் பின் மூன்றே முக்கால் நாழிகையும் உள்ள காலமே, அதாவது மாலை 4-30 மணி முதல் இரவு 7-30 மணி வரையில் உள்ள காலமே, பிரதோஷம் எனப்படும்.

முன்னொரு காலத்தில் தேவர்களும் அசுரர்களும் ஒன்று கூடி மேருமலையினை மத்தாகத் திருப்பாற்கடலில் நிறுவி அதனை சுழற்றக் கயிறாக வாசுகி என்ற பெரிய பாம்பைச் சுற்றிப் பாற்கடலைக் கடைந்தார்கள். எதற்காக? அதனின்று அமிர்தத்தைப் பெற்று தாங்கள் உண்டு இறவாமல் இருப்பதற்காகத்தான். ஆனால் கடலைக் கடைந்த வேகத்தில் வாசுகி என்ற பாம்பு கக்கிய விஷமும் கடலிலிருந்து எழுந்த ஆலமும் ஒன்று சேர்ந்தன. ஆலமும் ஆலமும் ஒன்று சேர்ந்து ஆலாலம் என்று பெயர் பெற்றது. இதைக்கண்ட தேவர்களும் அசுரர்களும் பயந்துகயிலைமலைக்குஓடினார்கள். கைலாயத்தில் வாசம் புரிகின்ற சிவபெருமானிடம் சரணம் என்று கூறி நந்தி தேவரிடம் கூறினார்கள். சிவபெருமான் தான் அவ் விஷத்தை 'உண்ணவோ அல்லது எரித்துவிடவோ!' எனக் கேட்டார். 'ஐயா தாங்களன்றி இக்கொடிய ஆலால விஷத்தை யார் மாற்ற முடியும். திருப்பாற்கடலில் இது முதலில் தோன்றியதாகும். இது தங்களுக்கு உரியது. தாங்கள் எல்லோரும் க்ஷேமமாக வாழ வழி செய்யுங்கள்' என்று பிரம்ம தேவர் கூறினார். எனவே சிவபெருமான் நஞ்சுண்டது சனிக் கிழமையில். பின்னர் கைலையங்கிரியில் ரிஷபத்தின் இரு கொம்பின் மத்தியில் இருந்து கொண்டு திரயோதசி திதி மாலை நேரத்தில்-அதாவது ப்ரதோஷ வேளை மாலை மணி 4-30 நிமிஷம் முதல் 6-45 நிமிஷ மணி வரையுள்ள நேரத்தில் சனிக்கிழமையில் வரும் பிரதோஷம் சிவபெருமானுனர்.

முதலில் ஆலால விஷத்தை உண்டதையும், பின்னர் தேவர்களுக்கு அருள் பாலிக்க சந்தியா நடனம் புரிந்ததையும் ஒருமிக்ககாட்டுவதாக உள்ளதால் சனி வாரத்தில் வரும் சனி பிரதோஷம் முக்கிய வழிபாடாகக் கொண்டு வழிபடுகிறோம்.

ஆலால விஷத்தை உண்டதால் நீலகண்டர் என்ற பெயர் கொண்டு தேவர்களை நோக்கி 'நீங்கள் இன்னொரு முறை அக்கடலைக் கடையுங்கள் உங்களுக்கு அமிர்தம் கிடைக்கும்' என்றார். அவ்வாறே தேவர்களும் செய்தனர். பல விலை உயர்ந்த பொருள்கள் கிடைத்தன. இது நிகழ்ந்த காலம் ஒரு ஏகாதசி இரவு மேலும் அக்கடலைக் கடைந்தபோது மறுநாள் விடியற்காலை துவாதசி திதியில் சுமார் 6 மணிக்கு அமிர்தம் தோன்றியது. அதனை எடுத்து அனைவரும் உண்டு மிகவும் மகிழ்ந்தனர்.

ஆடல் கலைகளிலும், பாடல்களிலும் மிக மகிழ்வுடன் அந்த நாளை போக்கினர். மறுநாள் திரயோதசி திதியன்று கைலாயத்தில் வாசம் பண்ணுகின்ற சிவபெருமானை நினைத்து அவர் இருப்பிடமான கயிலாயம் சென்று சிவபெருமானை நோக்கித் தங்களை மறந்து ஆடல் பாடல்களில் ஈடுபட்டு வீணில் பொழுதைக் கழித்தமைக்குத் தம்மை மன்னித்தருளுமாறு வேண்டினர். அன்பே சிவமாகிய சிவபெருமான் மன்னித்தருளி ஆடியபிரதோஷ நடனங்கண்டு தேவர்கள் பேறு பெற்றனர். இவ்வைபவத்தைக் கோயில்களில் தவறாமல் தரிசித்தோர் மற்ற நாட்களில் ஆலய தரிசனம் செய்யாது போனபாவம் நீங்கப் பெறுவர். இது உறுதி.

அவ்உற்சவ காலத்தில் நந்தி தேவர் பக்கத்திலும் ஈசுவரன் சந்நிதியிலும் நெய் தீபம் வைக்க வேண்டும். நந்திக்கு சிவப்பு அரிசி நிவேதனம் செய்விக்க வேண்டும். அருகம்புல் மாலை சாத்த வேண்டும். காலையில் பிரதோஷ நாயகருக்கு (சிறிய சந்திர சேகரமூர்த்தி) அபிஷேகம் செய்து மாலையில் வெள்ளி ரிஷப வாகனத்தில் அமர்த்தி திருக்கோயிலுக்குள் பிரகாரத்தை மூன்று முறை வலம் செய்விக்க வேண்டும்.

திரு. ஏ. என். ராமகிருஷ்ணன்,
குடியாத்தம்.

முதன் முறையில் சர்வ வாத்தியங்களுடனும் பன்னிரு திருமுறை பாராயணம், தேவாரம், வேத பாராயணம் முதலியவை செய்விக்க வேண்டும். இரண்டாவது பிரதக்ஷணத்தில் கோயிலின் ஈசான்ய மூலையில் அதாவது சனீஸ்வர பகவானின் சன்னதிக்கு எதிரில் (வடகிழக்கு மூலையில்) பிரதோஷ நாயகருக்கு கற்பூர ஹாரத்தி செய்விக்க வேண்டும். இந்த தரிசனத்தின் பலனை ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் அனுபவத்தால் உணர முடியுமே தவிர எழுதியோ, சொல்லியோ உணர்த்த முடியாத ஒரு சிறந்த உண்மை. மூன்றாவது பிரதக்ஷணம் முடிந்த உடன் எம்

# அர்த்த நாரீஸ்வரர்

அர்த்த நாரீசுவரர் என்பது ஈசனின வடிவம். மாது ஒரு பாகம் ஆனவர். ஒரே வடிவத்தில் ஆண் பாதி, பெண் பாதி. இது இயற்கைக்குப் பொருந்துமா என்னும் கேள்வி எழலாம். கொஞ்சம் துருவி ஆராய்ந்து பார்த்தால், இதுவே இயற்கையின் இயல்பு என்பது விளங்கும்.

தாவர உலகில் ஒரே வடிவத்தில் ஆண் இயல்பு, பெண இயல்பு இரண்டுமே சேர்ந்திருக்கின்றன. ஒரே புஷ்பத்தில் ஆண பாகம், பெண பாகம் இரண்டும் இருககின்றன. அவ்விரண்டின் பேர்பாதிக் கூட்டுற வால் புதிய விதை உண்டாகிறது. ஜங்கமங்களுள் ஒவவோர் உயிரும் அதனதன் தாய் தந்தையரின் பாதிப்பாதி அம்சத்தைப் பெற்றே உண்டா கிறது.

சைதயன்யம், ஜடம் ஆகிய இரண்டு தத்துவங்களே உடையது இயற்கை அறிவும் ஆனந்தமும் சைத்தன்யத்தைச சேர்ந்தவை. எது உணர்கிறதோ, அறிகிறதோ, மகிழகிறதோ அது 'சைதன்யம்'. எந்த உடலின் மூலமாக, மெய்யின மூலமாக கருவியின் மூலமாக, அறிவு மிளிர் கிறதோ அதற்கு 'ஜடம்' என்று பெயர். உயிரும் மெய்யும் சோந்து மனி தனுவதைப் போல, சைதன்யமும், ஜடமும சேர்ந்தால்தான் இயக்கம் முழுமை பெறுகிறது. உயிாத் தத்துவம் சிவம்; உடல் தத்துவம் சக்தி. உயிரும் உடலும் சேர்ந்தே இயற்கையின் திட்டத்தை அமைக்கின்றன

எல்லா ஜீவராசிகளிடத்தும் இக்கோட்பாடு உறுதி பெறுகிறது. சிவத் தத்துவத்துக்கும் சக்தித் தத்துவதருக்கும் புறமபாக இயற்கையில் ஒன்றுமே இல்லே. மாது ஒரு பாகம் ஆனவனும்-அர்த்த நாரீசுவரனும்-அவர் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பது, விவேகம் என்னும் கண் கொண்டு பார்ப்பவர்க்கு தெளிவாகும் உண்மையாகும்.

—சுவாமி சித்பவானந்தா

# வெற்றி

மனமே தோல்வியைக் குறித்துத் துயரமடையாதே. தோல்வியி லிருந்து நீ கற்றுக்கொள்ள வேண்டிய பாடம ஒன்று உணடு

தோல்வியிலிருந்து நீ பெறுகிற அறிவையும், ஞானத்தையும் வேறு யாருமே உனக்கு வழங்க முடியாது.

தோல்வியை நீ ஆராய்நது பாாத்தால் உன்னுடைய வீழ்ச்சியை நீ விசாரித்துப் பார்த்தால மெய்யறிவு எனனும் பொககிஷத்தை அதனுள் காண்பாய். இப்பொழுது தோல்வியாகத் தெனபடுவது நாளேககு வெறறிக்கு வித்தாகும்!

—சிவானநதா.

# வாழ்வது எப்படி?

மனிதர்கள் பறவைகளேப் போல் ஆகாயத்தில் பறக்கவும, மீன களேப் போல் தண்ணீரில் நீநதவும் கற்றுக் கொண்டிருக்கிருர்கள். ஆறல் தரையிலே மனிதாகளேப் போல் வாழ்வது எப்படி எனறு சரியாகக கறறுக் கொள்ளவில்லே!

—டாக்டா. ராதாகிருஷ்ணன.

தொகுத்தவர்: கமலா. மாரியப்பன்-கோவை.

பெருமானுக்கு பரிவேஷ தீபாராதனே முடித்து ஆஸ்தானம் எழுந்தருளச் செய்யும் காட்சியை பக்தர்கள் அமைதியுடனும் சிவ, சிவ என்று சொல்லி நாம்தரிசிக்கவேண்டும். 'இச சகத்தோர் முக்திக்கு ஆவலுறச்சிவன வன் வாககுடனே வந்த அரசே' என கிறுர் சிவவாக்கியர்.

பிரதோஷ காலத்தில் சிவபெரு மானுக்கும் நநதியம் பெருமானுக் கும ஒரே சமயத்தில் தீபாராதனே நடைபெறுகிறது. அதைக் காணத் தவருதீர்கள். சிவாலயங்களில் நந்தி எம்பெருமானுககும சிவலிங்கத்திற் கும் நடுவே செல்லக் கூடாது. பிர தோஷ வேளேயில் சுவாமி அபிஷேக ஜலம விழும் நிாமால்யத தொட்டி யைக கடக்காமல வலமாகவும், இட மாகவும் மாறிமாறிச சிவாலயத்தை வலம் வருவது மரபு. நந்தி எம்பெரு மானிடம இருநது புறபபட்டு சண் டேஸ்வர சனனிதி வரையில் சென்று மீண்டும் நந்தீஸ்வரரிடம வரையில் வநது, மீணடும் நநதியிடமிருந்து சண் டேசுவரர் வரையில செல்லுதல் சோம சூத்திர பிரதக்ஷணம எனப் படும். பிரதோஷ வழிபாடு செய் தால துன்பப்படுத்தும வறுமை, பயம், பாவம், மரண வேதனே இவையெல் லாம் ஒழிநதுவிடும். பல பேறுகளும் சிததிககும. அன்று பட்டினி இருப் பதும், மெளனத்தைக் கடை பிடிப் பதும் நனறு. அனபர்கள் காலேயி லிருந்து பட்டினி இருநது மாலேயில ஸவாமி தரிசனத்திறகுப் பிறகு ஒரு கைப்பிடி அனனம சிவனடியாருககோ அலலது ஓா எளிய ஏழைககோ கொடுத்த பிறகு ஆகாரம் உட் கொள்ளவும். பிரதோஷ வேளேயில் கூடடு வழிபாடு சாலச் சிறந்தது. ★



# அரசவில்லி ஸ்ரீ சூர்யநாராயணசுவாமி

ஆந்திரபிரதேசத்தில் ஸ்ரீகாகுளம் மாவட்டததில ஸ்ரீகாகுளத்திலிருநது இரணடு மைல் தொலைவில் அரசவில்லி என்றசிறறூர் உள்ளது. இங்கு சூர்யபகவானுக்கு ஒரு தனிக்கோவில் உள்ளது. இது மிகப் புராதனமான கோவில். நம் நாட்டில சூர்யனுக்குத் தனிக்கோவில் மிகவும் சொற்பம். அவைகளில் இதுவும் ஒன்று.

புராண வரலாறு மூலம நாம் அறிவது எனனவென்றால் இக்கோவில் தேவேந்திரனால் பிரதிஷ்டை செய்யப் பட்டது. அவன் சூாயன சிலையை இங்கு பிரதிஷ்டை செய்தான்.

ஸ்ரீகாகுளம மாவட்டததில் நாகவலலி ஆற்றின் கரையில ஸ்ரீ ருதர கோடீஸவர சுவாமிக்கு ஒரு கோவில் உளது. இது சிவன் கோவில. இங்கு துவாரபாலகராக நநதி உள்ளார். ஒரு சமயம் தேவேநதிரன் அவர் கட்டளைககுப் பணியாமல் கோவிலுக்குள் செலல முற்பட்டான். அங்கு சிவபெருமான் பார்வதியுடன தனித்திருப்பதால் உளளே செலலக்கூடாது எனறு நநதி தடுத்ததையும் பொருட்படுத்தாமல் மீறி உட்புக முனைந்தான. நநதி கோபமடைந்து அவனை எட்டி உதைததார். அந்த உதைதாங்காமல் தேவேநதிரன் இரண்டு கல் தள்ளிப் போய வீழ்ந்தான். மூர்சசையாகி விட்டான். அவனுடைய கனவில் ஒரு விஷயம் தெனபட்டது. சூர்யபகவானுக்கு ஒரு கோவில் கட்டி அவர் சிலையை பிரதிஷ்டை செயதால் அவனுடைய துனபமும, ஹிருதய வலியும் தீரும் எனறு அறிந்தான். மூர்ச்சை தெளிந்ததும தான கணட கனவு மீணடும நினைவில் வநதது. தான் வீழ்நத இடத்தில் இருந்த மணணைத் தோண்டினான். அப்பொழுது ஒரு அழகான சூர்யபகவான சிலையும் அவருடைய மூனறு தேவியர்களான உஷா, பத்மினி, சாயாதேவி ஆகியோருடன தென்பட்டது. அந்த சிலையின் காலடியில் மாதள மற்றும் பிங்களா என்ற துவாரபாலகர் உருவங்களும், அவர்களுககு மேலே சாமரம வீசும் சனகர் மற்றும் சனதனா உருவங்களும் காணபபட்டன சூர்யபகவான ஏழு குதிரைகள் பூட்டப்பட்ட ரதம் அருணனால் சாரத்யம் செய்யப்படுவது போல் காணபபட்டது இந்த உருவங்கள் எல்லாம் ஒரே கருங்கலலில் செதுக்கப்பட்டுப் பளபளப்பாகக் காணப்பட்டன. தேவேந்திரன் இச்சிலையை இங்கு பிரதிஷ்டை செய்து துனபம் நீங்கப் பெற்றான.

புதை பொருள் ஆராய்ச்சியாளர் மூலம் நாம் அறிவதாவது கலிங்க மன்னன் தேவேந்திரவர்மன் இக்கோயிலைக் கட்டி சூர்யபகவானை பிரதிஷ்டை செய்தான். அதற்குக் கல்வெட்டுச் செய்திகள் உள்ளன. காலம் 7-ம் நூற்றாணடின் பிற்பகுதி. அரசன் இநதக் கோவிலை பராமரிக்கவும், தீபங்கள் ஏற்றவும், பள்ளிக்கூடங்கள் நடத்தவும், வேத சாஸ்த்திரங்கள் படிக்கும மாணவர்களுக்கு உணவு விடுதிகள் கட்டவும் ஏராளமான நிலங்களைக கொடுத்தான். அவனை அடுத்து வநத அரசர்களும் 11-ம் நூற்றாண்டு வரை இந்த தர்மங்களைச் செய்து வந்தனர்.

கோவில் அழகாகக் கட்டபபட்டுளளது. முகபபு கோட்டைவாயில்போல் உள்ளது. ஒவ்வொரு வருடமும பிப்ரவரி மற்றும ஜூன் மாதங்களில் சில நாட்கள் காலை வேளையில் சூர்ய உதயததின்போது, சூர்யனுடைய கிரணங்கள் இந்தச்சிலையின பாதத்தில வீசுகின்றன. இநத சூர்ய கதிர்கள ஐந்து வாயில்களைக் கடந்து வருவது ஒரு விசேஷம். கோவில கலைஞர்களின் திறத்தை எடுததுக் காட்டுகின்றது. சில நிமிடங்களே இக்காட்சியைக் காணலாம்.

இக்கோவிலுக்கு மக்கள் திரளாக வருகினறனர். ஜாதி மத பேதமின்றி சூர்யனை வழிபடுகின்றனர். சிவனும் கேசவனும் ஒருவனே என்ற கொள்கை இங்கு நிலைநாட்டப்படுகினறது.

பஞ்ச லோகத்தால் ஆன ஐந்து சிலைகள் இக்கோவிலில் உள்ளன. அவையாவன 1. ஆதித்யன் 2. அம்பிகா 3. விஷ்ணு 4. கணேசா 5. மகேஸ்வரா.


**திரு. என். ராமகிருஷ்ணா,**

மாயூரம்


மூலவர் சூாயநாராயணரை திருமூாத்திகளான பிரம்மா, விஷ்ணு, மகேஸ்வரன ஆகிய மூவரின் அம்சம் என்று கருதுகின்றனர். உலகத்தை பிரதிதினமும் சுற்றிவரும் பகவான் எலலாவிதமான மககளையும் சூழ்நிலைகளையும் காணபதால் அவரை பிரத்யக்ஷ தெய்வமாகவும் வாழ்வின் உயிர்நாடியாகவும மக்கள் கருதுகின்றார்கள்.

அரசவிலலியை "ஹர்ஷவல்லி" எனறு தெலுங்கு புராணங்களும் பாடல்களும் கூறுகின்றன.

சுலோகம்.

> "ஹாஷவல்லீ புரீவாஸம
> ஸாயோஷா பதமிநியுதம்
> சூாயநாராயணம தேவம
> நௌமி ஸாவாாத்த தாயனம்"

தேவஸதானத்தார் அளித்த வரலாறறை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டது இககட்டுரை.



# ஆரூரும் குறுங்குடியும்

திரு. எம். எஸ். பிச்சுமணி-சென்னை-56

## ஆரூர்

1. 'ஆரூர்' என்பது திருவாரூர் திருத்தலத்தைக் குறிக்கும்.

2. சோழ நாட்டில் உள்ளது.

3. சைவத் திருத்தலம்.

4. ஆரூரில் பிறக்க முக்தி.

5. திருவாரூரில் தேர் அழகு.

6. சைவ சமயத்தின் தலைமைப் பீடம் – சப்த விடங்கத் தலங்களில் ஒன்று. மூலாதாரமான க்ஷேத்ரம.

7. ஒன்பது கோபுரங்கள் அறுபது விமானங்கள் உள்ள திருத்தலம்.

8. ஐந்து வேலி நிலப்பரப்பில் திருக்கோவில் அமைந்துள்ளது.

9. ஐந்து வேலி நிலப்பரப்பில் கமலாலயம் உள்ளது.

10. ஐந்து வேலி நிலப்பரப்பில் செங்கழுநீர் ஓடை அமைந்து உள்ளது.

11. தேவாசிரிய மண்டபம் இத்திருத்தலத்தில் விசேஷம். இங்குதான் இறைவன் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு 'தில்லை வாழ் அந்தணர்' என்ற முதலடியை எடுத்துக்கொடுத்த தலம். 'பெரிய புராணத்திற்கு' மூலம் இத்திருத்தலம்.

12. சுல்தான் படையெடுப்பின்போது, தில்லை நடராஜரை இங்குள்ள சபாபதி மண்டபத்தில் வைத்துத் தான் பாதுகாத்தார்கள்.

13. நூற்றியெட்டு சிவலிங்கங்கள் முப்பத்து மூன்று விநாயகர்கள் நவ துர்க்கைகள்—அத்துடன ஒரே வரிசையில் நவக்கிரஹங்கள் உள்ள ஒரே தலம்.

14. மதிற் சுவருக்குள் கிணறு உள்ளது. சுவை நிறைந்த நீர் உள்ள அபூர்வத்தலம்.

15. இந்திரன் இத்திருத்தலத்தில்தான் இறைவனை வழிபட்டார்.

16. கமலாயமும—திருக்கோவிலும் ஒரே பரப்பள வில் அமைந்த தலம்.

## குறுங்குடி

1. 'குறுங்குடி' என்பது திருக்குறுங்குடியைக் குறிக்கும்.

2. பாண்டிய நாட்டில் உள்ளது.

3. வைணவத் திருத்தலம.

4. குறுங்குடியை நினைத்தாலே முக்தி.

5. திருக்குறுங்குடி திருமதிள் அழகு.

6. வைணவ மூலமந்திரமான திருமந்திர உபதேசம் பெற்ற தலம. வைணவ நம்பி திருமண் காப்பு இட்டுக் கொண்ட க்ஷேத்ரம.

7. ஏழுநிலைக கோபுரம். இராமாயண காவியங்கள் முழுவதும் செதுக்கப்பட்ட கோபுரம்.

8. ஐந்து ஏக்கர் நிலப்பரப்பில் திருக்கோவில் அமைந்துள்ளது.

9. ஐந்துசு சுற்றுக்களைக் கொண்ட திருக்கோவில்.

10. ஐந்தாம் நாள் உற்சவததில் ஐந்து கருட சேவைகள் நடக்கும் திருத்தலம்.

11. கௌசிக மண்டபம் என்ற பெயர் பெற்ற மண்டபம் உள்ளது. இங்குதான் இறைவன் மூலம் கைசிக ஏகாதசியன்று 'கைசிக புராணம்' முதன் முதலாக ஏற்படுத்தப்பட்டது. கைசிக புராணத்திறகு மூலம் இத்திருத்தலம்தான.

12 சுலதான் படையெடுத்த, சமயம் ஸ்ரீரங்க ராஜனை இத்திருத்தலத்திலதான் வைத்துப் பாது காத்தார்கள.

13 சிவபெருமான் இத்திருத்தலத்தில் பக்கம் நின்றாராக காட்சியளிக்கிறார். உலகில எங்கும் காண முடியாத சிஙகவால் குரஙகுகள இஙகுதான உள்ளன.

14. பக்தனுககாக, கருடாழ்வாரும்—த்வஜஸ்தம்பமும விலகியுள்ள அபூாவத்தலம இது.

15. ஸ்ரீராமானுஜர் இத்தலததில்தான் முதல் மடத்தை ஸதாபித்தார்.

16. ஆழ்வார் வரிசைகளில் நம்மாழ்வாருக்குத் தனிச சன்னதி இல்லாத ஒரே தலம்.

# சருகுகள் போட்ட மாநாடு

'உயர்வற உயர்நலம் உடையவனாய் இருக்கின்ற எம்பெருமானே தலைவன்; அவனுக்கு உரிய உடைமைப் பொருள்கள்தான் உயிர்கள்', என்பதுதான் ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தின் அடிப்படையான கருத்து. இதனை,

''நாராயணன் பரனும்; நாம் அவனுக்கு நிலை அடியோம்'' என்று முழங்கி அருளினார் ஸ்வாமி தேசிகன். அந்தப் பரம்பொருளின் அருள் வரலாறுகளை நினைத்தாலோ அல்லது அப்பெருமானின் திருப்பெயர்களை நாவினிக்கப் பாடினாலோ, அடியார்கள் தம் வசம் இழந்து விடுவர். எம்பெருமானைச் சொல்லிப் பாடி எழுந்தும பரநதும் துள்ளுவர். தலையினோடு ஆதனம் தட்டத் தடு குட்டமாய்ப் பறப்பர். வேத முதல்வனைப் பாடி வீதிகள் தோறும் துள்ளுவர். பரஞ்சுடரை நினைந்து ஆடி, நீர் மல்கு கண்ணினராய் நெஞ்சம் குழைந்து நைவர். பிரானின் பேர்பல சொல்லிப் பிதற்றுவர். பிததர் என்று பிறர் கூறுமாறு, உலோகர் சிரிக்க நின்று ஆடுவர். ஆடி ஆடி அகம் கரைவர். இசை பாடிப் பாடிக் கணணீர் மல்குவர். நாடி நாடி ''நரசிங்கா!'' என்று வாடுவர்.

இவ்வாறு எம்பெருமானின அருள் வரலாறுகளைக் கேட்டாலே அல்லது அவனது திருநாமத்தைச் சொன்னாலே, இவவாறு அடியார்கள் தம் நிலை இழந்து தடுமாறுவர் என்றால், அப்பெருமானை நேரே கணடவர்கள் எத்தகைய நிலையை அடைவர்?

இந்நிலையை இதிகாசங்கள ஆஙகாங்கே விளககி உள்ளன. அப்பகுதிகளைக் குறிப்பிடும் ஆழ்வார்களின் அருளிச் செயல்களிலும் அதற்கு அமைந்த வியாக்யானங்களிலும், இந்நிலை மிகச் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. சீர்மைமிகு இராமாயணத்தில் ஒரு காட்சி! விசுவாமித்திர முனிவரின் யாகத்தைக் காக்க வந்த இராமனும் இலக்குவனும், யாகம் முடிந்தவுடன், மிதிலை நகர் நோக்கி முனிவருடன் புறப்பட்டனர். வழியில் அகலிகைக்கு வாழ்வு அளித்தான் இராமன். மேலும் பயணம் தொடர்கிறது. வழியிலே ஓர் அருமையான மாமரத் தோப்பு. தூய்மையும் அழகும் குளிர்ச்சியும் நிறைந்து, கண் கொள்ளாக் காட்சி தரும் சோலை. சோலையின் சூழல், முற்றும் துறந்த முனிவரையே கவர்ந்து, சற்று நேரம் அங்குத் தங்கிக் களைப்பாற வேண்டும் என்று ஆசைப்படச் செய்கிறது. இராமனிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்து அங்கே தங்குகிறார் முனிவர். சகோதரர்கள் இருவரும் முனிவரை ஓரிடத்தில் அமரச்செய்து அவரது அனுமதியுடன, சோலையின் வளங்காணச் சுற்றி வரத் தொடங்கினர்.

இதற்குள் விசுவாமித்திரரின் வருகையை அறிந்த மாமன்னன் சனகன், தன் அமைச்சர்களுடனும் குருவுடனும், அவரை நகரத்தின் எல்லையிலேயே வரவேற்கும் பொருட்டு, அவர் இருந்த சோலைக்கே வந்து விடுகின்றான். வந்தவர்களை அமரச் சொல்லி, உரையாடுகின்றார் முனிவர். திடீரென அந்தச் சூழ்நிலையிலே ஒரு மாறுதல்! எல்லோருடைய கண்களும் எதிர்ப்புறம் பார்க்கின்றன. அங்கே வைத்த கண்களை மீண்டும திருப்ப முடியாத காட்சி! என்ன அது?

ஆம்! இராமனும் இலக்குவனும் சோலையைச் சுற்றிப் பார்த்துவிட்டுத் திரும்புகின்ற காட்சிதான்! அவர்களோ இளமை ததும்பும் இளைஞர்கள் அமர்ந்து இருப்பவர்களோ, வாழ்நது மூத்துத் தளர்ந்த முதியவர்கள். ஆனால் கண்ணிமைக்கும் நேரத்திற்குள், இராம இலக்குவரைக் கண்டு, அவர்கள் எல்லோருமே எழுந்து நிற்கின்றனர். எல்லோருடைய பார்வையும் அவ்விருவரிடத்தும் பதிந்தன. கண்களில் ஆனநதக் கண்ணீர் பெருகுகிறது. உடம்பில் மயிர்க்கூச்செறிதல ஏற்பட்டது.

''காரணம் இன்றியேயும் கண்கள் நீர் கலுழ நிற்பார'' என்று இராமனைக் கணடதால், அயோத்தி வாழ் மக்கள் அடைந்த நிலையைக் கம்பர் கூறுவது போன்ற நிலையே இது. இதனை,

**புலவர் ஆ. இராமபத்திரன்,**
**தேரழுந்தூர்.**

''உடே ஸகல ஜுபு ரகுபதி ஆயே
விச்வாமித்ர நிகட பைடாயே |
பயே ஸப் ஸுகீ தேகி தோவு ப்ராதா
பாரி விலோசன புலகித காதா ||''

என்று துளசிதாஸா, தமது ''இராம சரித மானஸ்'' என்ற பக்திக் காவியத்தில் விளக்குகிறார். இறைவனை நேரே பார்க்கும்போது ஏறபடும அநுபவ உணாவிறகு இக்காட்சி நல்லதோர் எடுத்துக காட்டாகும்.

இதே உணர்வுதான் சீதையைத் திருமணக கோலத்தில், அவையில் முதன் முதல் கண்டவர்களுக்கும் ஏற்படுகிறது. இராமன வில்லை முறித்த பின்பு, நடக்க இருக்கும் திருமணத்தைக் காணும் பொருட்டு, மக்கள்

## சந்தாதாரர்களுக்கு...

*30-4-90*—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். புகார்களுக்கும்,விவரங்களுக்கும் 'ஆசிரியர்'ஸப்தகிரி,தி.தி.தே. திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

*15 16 21 34 44 107 108 178 181 301 302 307 393 395 396 516 520 526 638 639 640 643 647 648 650 665 694 1115 1116 1263 1271 1297 1347 1387 1412 1429 1438 1473 1485 1491 1493 1518 1538 2477 2565 2844 2858 2862 2872 2877 2880 2887 2889 2891 2898 2899 2907 2909 2910 2916 2918 2920 2924 2928 2932 2933 2935 2953 2961 2909* முதல் *2971 3502 3842 3928 4010 4092 4095 4098 4099 4101 4106* முதல் *4110 4112 4118* முதல் *4120 4123 4124 4126 4140 4144 4146* முதல் *4149 4153 4154 4155 4159 4163 4168 4170 4171 4175 4177 4179 4183 4184 4204 4205 4207 4218 4296 5084 5184 5465* முதல் *5469 5474* முதல் *5477 5568 5569 5572 5579 5580 5661*

வெள்ளம், மிதிலையில் திருமண மண்டபம் முழுதும் நிறைந்துள்ளது. தசரதன் தன் மைந்தனைப் பற்றிய பெருமித உணர்வுடன் அமர்ந்து இருக்கிறான். பக்கத்தில் விசுவாமித்திர முனிவர். இந்த நிலையில் நூற்றுக் கணக்கான தோழியர் தன்னைச் சூழ்ந்து வர, சீதாப் பிராட்டி திருமணக் கோலத்துடன், அழகுக்கு அழகு செய்தாற் போன்று, அவையில் புகுந்தாள். இதனைக் கண்ட சபையோரின் நிலையாது? இராமன் விசுவாமித்திர முனிவன் ஆகிய இருவரைத் தவிர, மற்ற அனைவரும் கைகளைத் தலைமேல் கூப்பி நின்றனர். அவளைத் தெய்வம் என்றே மனதில் கருதினார்களாம். எல்லோருக்கும் மனத்தின் வசமாகமாறியதாம் உடல். இதனை,

"நைவளம் நவிற்றுமொழி நண்ணவரலோடும்
வையம் நுகர் கொற்றவனும், மாதவரும் அல்லார்,
கைகள் தலை புக்கன, கருத்துளதும் எல்லாம்'
தெய்வம் எனஉற்ற, உடல்சிந்தை வசம் அன்றே!

[கம்ப-பால - கோலங்காண் படலம் - பாடல் 34]'

[நைவளம் நவிற்றும் மொழி—சீதை; வையம்நுகர் கொற்றவன்=இராமன்] என்கிறார் கவிச் சக்கரவர்த்தி கம்பர். இநதப் பாடலில் "வையம் நுகர் கொற்றவன்" என்ற தொடர்; இராமனுக்கும் பொருந்தும்; தசரதனுக்கும் பொருந்தும் என்பது குறிப்பிடத் தக்கது. தெய்வத்தை நேரே கண்டதனால், உயிர்கள் அடைந்த அனுபவத்தைக் காட்டும் இரண்டாவது சான்று இது.

இந்த அநுபவம் இராமாவதாரத்திற்கு மட்டும் உரியது அன்று கிருஷ்ணாவதாரத்திலும் இதற்கான சான்றைக் காணலாம்.

தருமத்தைக் காப்பதற்காக, எம்பெருமான், பாண்டவர் தூதனாக, அஸ்தினாபுரம் செல்கிறான்.

"தொடர்ந்து ஆரணம் முழங்க,
பஞ்சவர்க்குத் தூது நடந்தான்"

என்று இளங்கோவடிகள் போற்றக்கூடிய நிலையில், பகவானின் இச்செயல் பெருமைமிக்கது. ஐந்தாவது வேதம் எனப் புகழ் பெற்ற பாரதத்தின் உயிர்நிலையே, எம்பெருமானின் இச்செயல்தான்.

"தூது நடந்தவன் ஏற்றத்தைச் சொல்லுகிறது மகாபாரதம்" என்று பூர்வாச்சாரியர்கள் அருளிச்செய்வர்.

முதல் நாள் நகரத்திற்கு வந்த கண்ணபிரான், பீஷ்மர், துரோணர், துரியோதனன், கிருபர் என்ற எவர் வீட்டிற்கும் செல்லாமல், நேரே பக்தியில் முதிர்ந்தவனாகிய விதுரனின் இல்லத்தில் தங்கினான். அடுத்த நாள் காலையில் துரியோதனனின் சபைக்கு வர இருந்தான். நேரே தன் வீட்டிற்குக் கண்ணன் வராததால், கோபம் அடைந்த துரியோதனன், அடுத்த நாள் காலையில் அவையினரை நோக்கி,

"நம் அவைக்கு வருகின்ற கண்ணனுக்கு யாராவது இருப்பதற்கு இடம் கொடுத்து, வரவேற்று வணங்கி, இன்சொற்கள் கூறி உறவு கொண்டால், அவர்களின் ஊரையே நெருப்புக்கு இரையாக்குவேன்" என்று கொடுமையான ஆணை இட்டான். இதனை,

"ஏவலின் கண் வரு தூதனும் இடையன் இன்று நம் அவையில எய்தினால், ஓவல் இன்றி, எதிர் சென்று, கண்டு, தொழுது உறவுகூறில், இனி உங்கள்

ஊர், தீவலம் செய அடர்ப்பன் என்று சிறினுன், முறைமை மாறினுன்'' என்கிறுர் வில்லிபுதூரார். ''அவ்வாறு கண்ணனே வரவேறபோரின் செல்வத்தை எல்லாம் கவர்ந்து விடுவேன்'' என்று கூறியதாகப் பெருந்தேவனுர் பாரதம் கூறும்.

ஆனுல் கண்ணன் அவைக்குள் நுழைந்தபோது நடந்தது என்ன? அதுதான் முன்பு நாம் கண்ட இராமாவதார அநுபவத்துக்கு ஒப்பான ஒன்று. எம்பெருமான், துரியோதனின் சபையிலே புகுந்தபோது, அவன் இட்ட கட்டளைக்கு அடி பணிவார் யாரும் இல்லே. பீஷ்மனும் துரோணனும் கைகூப்பி எழுந்தனர். ஆயுதங்களேக் கையில் தாங்கிய சிற்றரசர்கள அனைவரும் தம்மை அறியாமல், அப்பெருமானின் திருவடியில் வீழ்நது வணங்கினர். கண்ணபிரானின திருவுருவைத் தன கண்களாற் கண்டால், தன்னுல் வணங்காதிருத்தல் இயலாது என்று கருதிய கர்ணன், தலே கவிழ்ந்து இருந்தான். சகுனி கரங்களால் கண்களே மூடிக் கொண்டான்.

துரியோதனனின் நிலே என்ன?

வீரக்கழல் அணிந்த மன்னர்களுக்கு இடையில், ஒளிமிக்க சூரியன் போன்று விளங்கிய துரியோதனன் கண்ணபிரானேக் கண்டவுடன், தன் நிலே மறந்து, தான் அவையோர்க்கு இட்ட கட்டளேயை மறந்து, தனனே அறியாமல் எழுந்திருந்து விடுகிறுன். பின், தன் செயல் குறித்து அவனுக்கே வெட்கம் ஏற்பட்டு, அத்துடன் கணணபிரான்மீது கொணட கோபமும் மிகுதியாகத் தோனற, உடனே அமாநது விட்டான் என கிறுர் பெரியாழ்வார். இதனே,

''கழல்மன்னர் சூழக் கதிர்போல் விளங்கி,
எழலுற்று மீண்டே இருந்து உன்னே நோக்கும்
சுழலேப் பெரிதுடைத் துச்சோதனனே''

என்ற பெரியாழ்வாரின் பாசுரப்பகுதி நன்கு விளக்கும். இப்பாசுரப் பகுதியில்,

''எழலுற்று மீண்டே இருந்து'' என்ற தொடர்தான், கண்ணபிரானேக் கண்டவுடன் துரியோதனன் அடைந்த நிலேயை நமக்குக் காட்டுகிறது.

''தானும் தொடை நடுங்கி எழுந்திருக்க நினேத்து, எழுந்து'' என்றும்,

''மீண்டும் கருவுதலாலே (பழிவாங்கும் எண்ணம்மிகுவதால்) தெரியாதபடி இருந்து'' என்றும் இத்தொடர்க்கு விளக்கம் அருளினுர் உரைகாரர்-எத்தகைய கொடியவனுய் இருந்தாலும்-ஏன்! ஆணவமும் பகையும் மிகுந்த துரியோதனனுய் இருந்தாலும், எம்பெருமானின் புனிதக் காட்சியைக் கண்ட அந்தக் கணத்தில் தன் நிலே மறந்துவிடுவான் என்பதுதான், இந்நிகழ்ச்சியில் இருந்து நாம் அறியத் தக்க உண்மையாகும். உயிர்களின் இந்த இயல்பான தன்மையை அறியாமல், 'கண்ணன் வந்தால், எவரும் எழுந்து வரவேற்றல் கூடாது' என்று ஆணேயிட்ட துரியோதனன் செயலுக்கு, வியாக்யானச் சக்கரவர்த்தி, ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளே, மிக நயமான ஓர் உவமையைக் கூறுகிறுர். விதையாய்க் கிடந்து, முளேயாய் அரும்பி, செடியாய்த் திகழ்ந்து, கிளேயாய்ப் பெருகி, மரமாய் நிற்கிற தாவர இனத்தில், அவ்வப்போது காலப் போக்கில், முதிர்ந்த பழுப்புகள் காய்ந்துபோய், சருகுகளாக உதிர்வது உண்டு.

அத்தகைய சருகுகள் எல்லாம், ஒரு நாள் ஒன்று கூடி, ஒரு மாபெரும் மாநாடு போன்று, பெருங்கூட்டம் ஒன்று நடத்தினவாம். கூட்டத்தில் எல்லாச் சருகுளும் ஒன்றுகூடி ஒரு முடிவும் எடுத்தன.

''இனிமேல், எத்தகைய காற்று அடித்தாலும், சருகுகளாகிய நாம் எக்காலத்தும் பறத்தல் கூடாது'' என்பதே அந்த முடிவு. காற்று அடிப்பதற்கு முன்பு, சருகுகள் இவ்வாறு முடிவு செய்தாலும், காற்று அடிக்கும்போது இச்சருகுகள் என்னபாடு படும்! அத்தகைய சருகுகள் கூடிச் செய்த முடிவு போன்றதுதான், துரியோதனன் சபையில் செய்த முடிவு என்கிறுர் ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளே, இதனே,

''சருகு எல்லாம் கூடி, காற்று அடித்தால் பறக்கக்கடவோம் அல்லோம்'' என்று பண்ணும் வியவஸ்தை போலேயிறே, சேஷி (தலேவன்) முன்பு, சேஷபூதர் (அடியவர்) ''அநுகூலிக்கக் கடவோம் அல்லோம் என்னும் வியவஸ்தை'' என்றுஅவரது வியாக்யானப் பகுதி விளக்கும். இதே போன்ற நிலேயில்தான், திருவள்ளுவரும்,

''எலிகள் கடல் போன்று பெருமளவிற்கூடி, பாம்புக்கு எதிராக ஆரவாரம் செய்தாலும் ஒரு பாம்பின் மூச்சுக் காற்றிற்கே எதிர் நிற்க முடியாமல் அழியும்'' என்ற பொருளில்,

''ஒலித்தக்கால் என்னும்? உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும்''

என்றுர். நாம் எல்லோரும் சருகுகள். எம்பெருமான்பெருங்காற்று. ஆகவே எம்பெருமானுக்கு முன்னுல், உயிர்கள், அவன் வசமாகவே நிற்குமேயன்றி, எதிராகச் செயற்படுவது இயலாது என்ற உண்மைதான், நாம் அறிய வேண்டிய இன்றியமையாத ஒன்றுகும். ★

# மதிப்புரை

தேன்மலா என்னும் தலைப்பில் கவிஞர் எம். வி. குமார் அவர்களால் எழுதப்பெற்ற இந்நூல் கணபதி பாடல்கள், முருகன் பாடல்கள், ராகவேந்திரர் பாடல்கள, சங்கராசசாரியர் பாடல்கள, சிவன் பாடல்கள், தேவி பாடல்கள், திருமால் பாடல்கள், ஐயப்பன பாடல்கள், மதுராந்தகம் பாடல்கள், ஷீரடிபாபா பாடல்கள் - எனனும் பத்து தலைப்புகளில் அமைநதுள்ளது.

எதிலும் மதுரம் வாய்ந்தது 'மதுராந்தகம்'. அவ்வூர் சொந்த ஊராக அமைந்தது இந்த ஆசிரியருக்கு கிட்டிய வாய்ப்பாகும். இதில் அமைந்துள்ள பாடல்களின் பொருள் போக்கும், யாப்புப் போக்கும் இவரின் உள்ளொளி ஈடுபாட்டையும, தமிழார்வத்தையும், எளிய இனிய தமிழில் - யாப்பமைதியும் இசை நலனும வாய்க்கப்பாடும் கவிஞர் என்பதையும் எடுத்துக்காட்டுகின்றன. பாடல்கள் பக்தியோடு பண்கொடுத்துப் பாடும் பெற்றி வாய்ந்தன.

ஒவ்வொரு தலைப்பிலும் பல உட்தலைப்புகள் இடம் பெறறுள்ளன. உட்தலைப்புக்களின் தலைப்புகள பாடலின் முதலடியாகக்கொண்டுள்ள அழகு பாராட்டத்தக்கது.

கணபதி பாடல்களில் கணபதி உருவ அழகு, அவரின் மகிமை, ஔவையார் அகவல் பாடல்களில் கணபதியைப் பாடிப் பரவசம் பட்டமை, கணபதி பிரவணமாயத் திகழ்கின்றமை - ஆகியச்செய்திகள் பேசப்படுகின்றன.

முருகன் பற்றியப் பாடல்களில் — ஆறுமுகன் 'அழகைக் காண வாருங்கபு' — தலைப்பில் அமைந்த பாடல்கள் 'கும்மி பாடல்' — போக்கில் பாடப் பெற்றுள்ளன. 'கந்தனின் புகழ்பாடும் கன்னித்தமிழ்' — பகுதி இவ்விடத்துப் பொருநதாதாயினும் தமிழ்மொழியின் சிறப்பை எடுத்துக் காட்டுகிறது. ஆசிரியர் தமிழ் மொழியை சுந்தரனோடும், கந்தன் புகழ்பாடும் திருப்புகழோடும் தொடர்புப்படுத்திப் பாடியுள்ளமை படிப்போரை கவர்வதாய் உள்ளது.

"முப்போதும் முருகன் நாமம் முழங்கி
... ............ .......
சங்கரனின் துணைநின்று
அருளுவான"

என்று முருகன் அருள் பெருவதறகு ஆசிரியர் வழிகாட்டுகிறார்.

அடுத்து ஆந்திராவில் துங்கபத்திரா நதிக்கரையில் அமைந்த குருவ ராஜ ராகவேந்திரர் மகிமையையும், அவர் இருப்பிடத்தின் சிறப்பையும் தெய்வ மணம் கமழப் பாடியுள்ளார்.

கஞ்சி காமகோடி சங்கராசாரியார் பற்றிய பாடல்கள் படிக்கப் படிககப் பக்திச்சுவை ஊட்டுவன. பொருள முகோடும், சொல்லழகும் இந்தப் பாடல்களில் அமைந்துள்ளன. இவ்விடத்து அருள், காஞ்சி, முக்தி, பக்தி மனம, சக்தி, சாந்தி—ஆகிய மூன்று எழுத்தில் அமைந்த சொற்கள் ஒன்றிற்கொன்று கொண்டுள்ள தொடர்பை நனகு விளக்குகிறார்.

"கயிலை நாதனை நினை மனமே—திரு
மயிலை மேவிய மன்னனைத் -தினமே"

என்று கயிலைநாதனை தினமும்வணங்க விழைகிறார் ஆசிரியர்.

தேவி பாடல்கள்—தலைப்பில் திருமகள், கணபதி, மாரியாய், மதுரை மீனாட்சி, மகமாயி, சமயபுரம், கலைமகள், மதுராந்தக மகிஷாசுரி - ஆகிய தெய்வங்களின் மகிமையைச் சொல்லி பக்திச்சுவை நனிச்சொட்டச் சொட்டப்பாடுகிறார்.

"எப்போது பார்த்தாலும் எழிற்கோலம்
—நாம்
தப்பாமல் தொழுதிட்டால அருள்
கூடும்
முக்காலும் நினைப்பார தம் துயர்
போக்கிடுமே—நமக்கு
அருள கருணை வழிகாட்டுமே"

இப்பாடல் - தட்டுத்தடுமாற்றம் இல்லாத நடை அழகிற்கு சான்றாய் நிற்கிறது.

திருவேங்கடத்து மாலவன், ராம நாமம்—பெருமைகளையும், அவர்கள் வீற்றிருக்கும் இடங்களின அழகினையும - அவர் பேசும் திறன் - அனைவருக்கும் தேவையான ஒன்று.

சபரிமலையை இருப்பிடமாய்க் கொண்ட ஐயப்பன் பற்றிய பாடல்கள்-ஐயப்பனின் சரணகோஷத்தோடு அமைநதுள்ளன.

மணணிலே சிறநதது மதுராந்தகம் எனறு ஆசிரியர் தம் ஊரைப் பறறியப் பாடலகளை இறுதியில் அமைத்து நூலை முடிக்கிறார்.

இந்நூல படிக்கப் படிக்க ஆவல் தூணடுவது; பகதிசசுவை ஊட்டுவது; எளிய இனிய கவிதைவடிவில் அமைந்தது. தமிழர் அனைவரும் படித்துப் பயனபெறத்தக்கது.

தேன் மலர்
ஆசிரியர்: எம். வி. குமார்
விலை : 10/-
ஸௌமி வெளியீடு,
14, தென்ராயன தெரு,
மதுராநதகம் - (தமிழ்நாடு)

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

